உ

கணபதி துணை

# அபிராமியந்தாதி

## காப்பு.

தாரமர் கொன்றையுஞ் சண்பக மாலையுஞ் சாத்துந்தில்லை
யூரர்தம் பாகத் துமைமைந்த னேயுல கேழும்பெற்ற
சீரபி ராமியந் தாதியெப் போதுமென் சிந்தையுள்ளே
காரமர் மேனிக் கணபதி யேநிற்கக் கட்டுரையே.

---

உதிக்கின்ற செங்கதி ருச்சித் திலக முணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி யபிராமி யென்றன் விழுத்துணையே. (க)

துணையுந் தொழுந்தெய்வ மும்பெற்ற தாயுஞ் சுருதிகளின்
பணையுங் கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூங்
கணையுங் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமுங்கையி
லணையுந் திரிபுர சுந்தரி யாவ தறிந்தனமே (உ)

அறிந்தே னெவரு மறியா மறையை யறிந்துகொண்டு
செறிந்தே னுனது திருவடிக் கேதிரு வேவெருவிப்
பிறிந்தேனின் னன்பர் பெருமை யெண்ணாத கருமநெஞ்சான்
மறிந்தே விழுநர குக்குற வாய மனிதரையே. (ங)

மனிதருந் தேவரு மாயா முனிவரும் வந்துசென்னி
குனிதருஞ் சேவடிக் கோமள மேகொன்றை வார்சடைமேற்
பனிதருந் திங்களும் பாம்பும் பகீரதி யும்படைத்த
புனிதரு நீயுமென் புந்தியெந் நாளும் பொருந்துகவே.

பொருந்திய முப்புரை செப்புரை செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குன் மனோன்மணி வார்சடையோ
னருந்திய நஞ்சமு தாக்கிய வம்பிகை யம்புயமேற்
றிருந்திய சுந்தரி யந்தரி பாதமென் சென்னியதே. (௫)

சென்னிய துன்பொற் றிருவடித் தாமரை சிந்தையுள்ளே
மன்னிய துன்றிரு மந்திரஞ் சிந்தூர வண்ணப்பெண்ணே
முன்னிய நின்னடி யாருடன் கூடி முறைமுறையே
பன்னிய தென்று முனதுபர மாகம பத்ததியே. (௬)

ததியுறு மத்திற் சுழலுமென னாவி தளர்விலதோர்
கதியுறு வண்ணங் கருதுகண் டாயகம லாலயனு
மதியுறு வேணி மகிழ்நனு மாலும் வணங்கியென்றுந்
துதியுறு சேவடி யாய்சிந்து ரானன சுந்தரியே. (௭)

சுந்தரி யெந்தை துணைவியென் பாசத் தொடரையெல்லாம்
வந்தரி சிந்தூர வண்ணத்தி னாண்மகிடன் றலைமே
லந்தரி நீலி யழியாத கன்னிகை யாரணத்தோன்
கந்தரி கைத்தலத் தாண்மலர்த் தாளென் கருத்தனவே. (௮)

கருத்தன வெந்தைதன் கண்ணன வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன பாலழும் பிள்ளைக்கு நல்கின பேரருள்கூர்
திருத்தன பாரமு மாரமுஞ் செங்கைச் சிலையுமம்பு
முருத்தன மூரலு நீயுமம் மேவந்தென் முன்னிற்கவே. (௯)

நின்று மிருந்துங் கிடந்து நடந்து நினைப்பதுன்னை
யென்றும் வணங்குவ துன்மலர்த் தாளெழு தாமரையி
னொன்று மரும்பொரு ளேயரு ளேயுமை யேயிமயத்
தன்றும் பிறந்தவ ளேயழி யாமுத்தி யானந்தமே. (௧௦)

ஆனந்த மாயென் னறிவாய் நிறைந்த வமுதமுமாய்
வானந்த மான வடிவுடை யாண்மறை நான்கினுக்குந்
தானந்த மான சரணார விந்தந் தவளநிறக்
கானந்த மாடரங் காமெம்பி ரான்முடிக் கண்ணியதே. (௧௧)

கண்ணிய துன்புகழ் கற்பதுன் னாமங் கசிந்துபத்தி
பண்ணிய துன்னிரு பாதாம் புயத்திற் பகலிரவா

நண்ணிய துன்னை நயந்தோ ரவையத்து நான்முன்செய்த
புண்ணிய மேதென்னம் மேபுவி யேழையும் பூத்தவளே. (கஉ)

பூத்தவ ளேபுவ னம்பதி னான்கையும் பூத்தவண்ணங்
காத்தவ ளேபின் கரந்தவ ளேகறைக் கண்டனுக்கு
மூத்தவ ளேயென்று மூவா முகுந்தற் கிளையவளே
மாத்தவ ளேயுனை யன்றிமற் றோர்தெய்வம் வந்திப்பதே. (கங)

வந்திப் பவருன்னை வானவர் தானவ ரானவர்கள்
சிந்திப் பவர்நற் றிசைமுகர் நாரணர் சிந்தையுளே
பந்திப் பவரழி யாப்பர மானந்தர் பாரிலுன்னைச்
சந்திப் பவர்க்கெளி தாமெம்பி ராட்டிநின் றண்ணளியே. (கச)

தண்ணளிக் கென்றுமுன் னேபல கோடி தவங்கள்செய்வார்
மண்ணளிக் குஞ்செல்வ மோபெறு வார்மதி வானவர்தம்
விண்ணளிக் குஞ்செல் வமுமழி யாமுத்தி வீடுமன்றோ
பண்ணளிக் குஞ்சொற் பரிமள யாமளைப் பைங்கிளியே. (கரு)

கிளியே கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்தொளிரு
மொளியே யொளிரு மொளிக்கிட மேயெண்ணி லொன்றுமில்லா
வெளியே வெளிமுதற் பூதங்க ளாகி விரிந்தவம்மே
யளியே னறிவள விற்கள வான ததிசயமே. (கசு)

அதிசய மான வடிவுடை யாளர விந்தமெல்லாந்
துதிசய வானன சுந்தர வல்லி துணையிரதி
பதிசய மான தபசய மாகமுன் பார்த்தவர்த
மதிசய மாகவன் றோவாம பாகத்தை வவ்வியதே. (கஎ)

வவ்விய பாகத் திறைவரு நீயு மகிழ்ந்திருக்குஞ்
செவ்விய முங்க டிருமணக் கோலமுஞ் சிந்தையுள்ளே
யவ்வியந் தீர்த்தென்னை யாண்டபொற் பாதமு மாகிவந்து
வெவ்விய காலனென் மேல்வரும் போது வெளிநிற்கவே. (கஅ)

வெளிநின்ற நின்றிரு மேனியைப் பார்த்தென் விழியுநெஞ்சுங்
களிநின்ற வெள்ளங் கரைகண்ட தில்லை கருத்தினுள்ளே
தெளிநின்ற ஞானந் திகழ்கின்ற தென்ன திருவுளமோ
வொளிநின்ற கோணங்க ளொன்பது மேவி யுறைபவளே. (கசு)

உறைகின்ற நின்றிருக் கோயிலின் கேள்வ ரொருபக்கமோ
வறைகின்ற நான்மறை யின்னடி யோமுடி யோவமுத
நிறைகின்ற வெண்டிங்க ளோகஞ் சமோவென்ற னெஞ்சகமோ
மறைகின்ற வாரிதி யோபூர ணாசல மங்கலையே. (உ0)

மங்கலை செங்கல சம்முலை யாண்மலை யாள்வருணச
சங்கலை செங்கைச சகல கலாமயிற் றாவுகங்கை
பொங்கலை தங்கும் புரிசடை யோன்புடை யாளுடையாள்
பிங்கலை நீலிசெய் யாள்வெளி யாள்பசும் பெண்கொடியே. (உக)

கொடியே யிளவஞ்சிக் கொம்பே யெனக்குவம் பேபழுத்த
படியே மறையின் பரிமள மேபனி மாலிமயப்
பிடியே பிரமன் முதலாய தேவரைப் பெற்றவம்மே
யடியே னிறந்திங் கினிப்பிற வாமல்வந் தாண்டுகொள்ளே (உஉ)

கொள்ளேன் மனத்தினின் கோலமல் லாதன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன் பரசம யம்விரும் பேன்வியன் மூவுலகுக்
குள்ளே யனைத்தினுக் கும்புறம் பேயுள்ளத் தேவிளைந்த
கள்ளே களிக்குங் களியே யளியவென் கண்மணியே. (உங)

மணியே மணியி னொளியே யொளிரு மணிபுனைந்த
வணியே யணியு மணிக்கழ கேயணு காதவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே யமரர் பெருவிருந்தே
பணியே னொருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே. (உச)

பின்னே திரிந்துன் னடியாரைப் பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கண் முயன்றுகொண் டேன்முதன் மூவருக்கு
மன்னே யுலகுக் கபிராமி யென்னு மருமருந்தே
யென்னே யினியுன்னை யான்மறவா மனின் றேத்துவனே. (உரு)

எத்து மடியவ ரீரே ழுலகினை யும்படைத்துங்
காத்து மழித்துந் திரிபவ ராங்கமழ் பூங்கடம்பு
சாத்துங் குழலணங் கேமண நாறுநின் றாளிணைக்கென்
னாத்தங்கு புன்மொழி யேறிய வாறு நகையுடைத்தே (உசு)

உடைத்தனை வஞ்சப் பிறவியை யுள்ள முருகுமன்பு
படைத்தனை பத்ம பதயுகஞ் சூடும் பணியெனக்கே

யடைத்தனை நெஞ்சத் தழுக்கையெல் லாநின் னருட்புனலாற்
றுடைத்தனை சுந்தரி நின்னரு ளேதென்று சொல்லுவதே. (உஎ)

சொல்லும் பொருளு மெனநட மாடுந் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி யேநின் புதுமலர்த்தா
ளல்லும் பகலுந் தொழுமவர்க் கேயழி யாவரசுஞ்
செல்லுந் தவநெறி யுஞ்சிவ லோகமுஞ் சித்திக்குமே. (உஅ)

சித்தியுஞ் சித்தி தருந்தெய்வ மாகித் திகழும்பரா
சத்தியுஞ் சத்தி தழைக்குஞ் சிவமுந் தவமுயல்வார்
முத்தியு முத்திக்கு வித்தும் வித்தாகி முளைத்தெழுந்த
புத்தியும் புத்தியி னுள்ளே புரக்கும் புரந்தையன்றே. (உகூ)

அன்றே தடுத்தென்னை யாண்டுகொண் டாய்கொண்ட தல்லவென்
நன்றே யுனக்கினி நானென் செயினு நடுக்கடலுட் [கை
சென்றே விழினுங் கரையேற் றுகைநின் றிருவுளமே
யொன்றே பலவுரு வேயரு வேயென் னுமையவளே. (௩௦)

உமையு முமையொரு பாகனு மேக வுருவில்வந்திங்
கெமையுந் தமக்கன்பு செய்யவைத் தாரினி யெண்ணுதற்குச்
சமயங் களுமில்லை யீன்றெடுப் பாளொரு தாயுமில்லை
யமையு மமையுறு தோளியர் மேல்வைத்த வாசையுமே. (௩௧)

ஆசைக் கடலி லகப்பட் டருளற்ற வந்தகன்கைப்
பாசத்தி லல்லற் படவிருந் தேனைநின் பாதமென்னும்
வாசக் கமலந் தலைமேல் வலியவைத் தாண்டுகொண்ட
நேசத்தை யென்சொல்லு வேனீசர் பாகத்து நேரிழையே. (௩௨)

இழைக்கும் வினைவழி யேயடுங் காலனெனைநடுங்க
வழைக்கும் பொழுதுவந் தஞ்சலென்பா யத்தர்சித்த மெல்லாங்
குழைக்குங் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே
யுழைக்கும் பொழுதுன்னை யேயன்னை யேயென்ப னோடிவந்தே. ()

வந்தே சரணம் புகும்படி யாருக்கு வானுலகந்
தந்தே பரிவொடு தான்போ யிருக்குஞ் சதுர்முகமும்
பைந்தே னலங்கற் பருமணி யாகமும் பாகமும்பொற்
செந்தேன் மலரு மலர்கதிர் ஞாயிறுந் திங்களுமே. (௩௪)

திங்கட் பகவின் மணநாறுஞ் சீறடி சென்னிவைக்க
வெங்கட் கொருதவ மெய்திய வாவெண் ணிறந்தவிண்ணோர்
தங்கட்கு மிந்தத் தவமெய்து மோதாங் கக்கடலுள்
வெங்கட் பணியணை மேற்றுயில் கூரும் விழுப்பொருளே. (கரு)

பொருளே பொருண்முடிக் கும்போகமே யரும் போகஞ்செய்யு
மருளே மருளில் வருந்தெரு ளேயென் மனத்துவஞ்சத்
திருளே துமின்றி யொளிவெளி யாகி யிருக்குமுன்ற
னருளே தறிகின்றி லேனம்பு யாதனத் தம்பிகையே. (கசு)

கைக்கே யணிவது கன்னலும் பூவுங் கமலமன்ன
மெய்க்கே யணிவது வெண்முத்து மாலை விடவரவின்
பைக்கே யணிவது பன்மணிக் கோவையும் பட்டுமெட்டுத்
திக்கே யணியுந் திருவுடை யானிடஞ் சேர்பவளே. (கஎ)

பவளக் கொடியிற் பழுத்த செவ்வாயும் பனிமுறுவற்
றவளத் திருநகை யுந்துணை யாவெங்கள் சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை சாய்க்குந் துணைமுலையா
ளவளைப் பணிமின்கண் டீரம ராவதி யாளுகைக்கே. (கஅ)

மீளுகைக் குன்ற னடித்தா மரைகளுண் டந்தகன்பான்
மூளுகைக் குன்றன் விழியின் கடையுண்டு மேலிவற்றின்
ஆளுகைக் கென்குறை நின்குறை யேயன்று முப்புரங்கண்
மாளுகைக் கம்பு தொடுத்தவில் லான்பங்கில் வாணுதலே. (கக)

வாணுதற் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்திறைஞ்சிப்
பேணுதற் கெண்ணிய வெம்பெரு மாட்டியைப் பேதைநெஞ்சாற்
காணுதற் கண்ணிய ளல்லாத கன்னியைக் காணுமன்பு
பூணுதற் கெண்ணிய வெண்ணமன் றோமுன்செய் புண்ணியமே. ()

புண்ணியஞ் செய்தன மேமன மேபுதுப் பூங்குவளைக்
கண்ணியுஞ் செய்ய கணவருங் கூடிநங் காரணத்தா
னண்ணியிங் கேவந்து தம்மடி யார்க ணடுவிருக்கப்
பண்ணிநஞ் சென்னியின் மேற் பத்மபாதம் பதித்திடவே. (சக)

இடங்கொண்டு விம்மி யிணைகொண் டிறுகி யிளகிமுத்து
வடங்கொண்ட கொங்கை மலைகொண் டிறைவர் வலியநெஞ்சை

நடங்கொண்ட கொள்கை நலங்கொண்ட நாயகி நல்லரவின்
படங்கொண்ட வல்குற் பனிமொழி வேதப் பரிபுரையே. (௪௨)

பரிபுரச சீறடிப் பாசாங் குசைபஞ்ச பாணியின்சொற்
றிரிபுர சுந்தரி சிந்துர மேனிய டீமைநெஞ்சிற்
புரிபுர வஞ்சரை யஞ்சக் குனிபொருப் புச்சிலைக்கை
யெரிபுரை மேனி யிறைவர்செம் பாகத் திருந்தவளே. (௪௩)

தவளே யிவளெங்கள் சங்கர ஞர்மனை மங்கலமா
மவளே யவர்தமக் கன்னையு மாயின ளாகையினு
லிவளே கடவுளர் யாவர்க்கு மேலை யிறைவியுமாந், துவளே
னினியொரு தெய்வமுண் டாகமெய்த் தொண்டு செய்தே. (௪௪)

தொண்டுசெய் யாதுநின் பாதந் தொழாது துணிந்திச்சையே
பண்டுசெய் தாருள ரோவில ரோவப் பரிசடியேன
கண்டுசெய் தாலது கைதவ மோவன்றிச் செய்தவமோ
மிண்டுசெய் தாலும் பொறுக்கைநன் றேபின் வெறுக்கையன்றே. ()

வெறுக்குந் தகைமைகள் செய்யினுந் தம்மடி யாரைமிக்கோர்
பொறுக்குந் தகைமை புதியதன் றேபுது நஞ்சையுண்டு
கறுக்குந் திருமிடற் றானிடப் பாகங் கலந்தபொன்னே
மறுக்குந் தகைமைகள் செயயினும யானுன்னை வாழ்த்துவனே.

வாழும் படியொன்று கண்டுகொண் டேன்மனத் தேயொருவர் ()
வீழும் படியன்று விள்ளும் படியன்று வேலைநில
மேழும் பருவரை யெட்டுமெட் டாம லிரவுபகற்
சூழுஞ் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே. (௪௭)

சுடருங் கலைமதி துன்றுஞ் சடைமுடிக் குன்றிலொன்றிப்
படரும் பரிமளப் பசசைக் கொடியைப் பதித்துநெஞ்சி
லிடருந் தவிர்த்திமைப் போதிருப் பார்பின்னு மெய்துவரோ
குடருங் கொழுவுங் குருதியுந் தோயுங் குரம்பையிலே. (௪௮)

குரம்பை யடுத்துக் குடிபுக்க வாவிவெங் கூற்றுக்கிட்ட
வரம்பை யடுத்து மறுகுமப் போது வளைக்கையமைத்
தரம்பை யடுத்த வரிவையர் சூழவந் தஞ்சலென்பாய்
நரம்பை யடுத்த விசைவடி வாய்நின்ற நாயகியே. (௪௯)

நாயகி நான்முகி நாரா யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கியென்
றாயகி யாதி யுடையாள் சரண மரணமக்கே. (௫0)

அரணம் பொருளென் றருளொன் றிலாத வசுரர்தங்கண்
முரணன் றழிய முனிந்தபெம் மானு முகுந்தனுமே
சரணஞ் சரண மெனநின்ற நாயகி தன்னடியார்
மரணம் பிறவி யிரண்டுமெய் தாரிந்த வையகத்தே. (௫௧)

வையந் துரக மதகரி மாமகு டஞ்சிவிகை
பெய்யுங் கனகம் பெருவிலை யாரம் பிறைமுடித்த
வையன் திருமனை யாளடித் தாமரைக் கன்புமுன்பு
செய்யுந் தவமுடை யார்க்குள வாகிய சின்னங்களே. (௫௨)

சின்னஞ் சிறிய மருங்கினிற் சாத்திய செய்யபட்டும்
பொன்னம் பெரிய முலையுமுத் தாரமும் பிச்சிமொய்த்த
கன்னங் கரிய குழலுங்கண் மூன்றுங் கருத்தில் வைத்துத்
தன்னந் தனியிருப் பார்க்கிது போலுந் தவமில்லையே. (௫௩)

இல்லாமை சொல்லி யொருவர்தம் பாற்சென் றிழிவுபட்டு
நில்லாமை நெஞ்சி னினைகுவி ரேனித்த நீடுதவங்
கல்லாமை கற்ற கயவர்தம் பாலொரு காலத்திலுஞ்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே. (௫௪)

மின்னா யிரமொரு மெய்வடி வாகி விளங்குகின்ற
தன்னா ளகமகி ழானந்த வல்லி யருமறைக்கு
முன்னாய் நடுவெங்கு மாய்முடி வாய முதல்வி தன்னை
யுன்னா தொழியினு முன்னினும் வேண்டுவ தொன்றில்லையே. (௫௫)

ஒன்றா யரும்பிப் பலவாய் விரிந்திவ் வுலகெங்குமாய்
நின்றா ளனைத்தையு நீங்கிநிற் பாளென்ற னெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்ற வாவிப் பொருளறிவா
ரன்றா லிலையிற் றுயின்றபெம் மானுமென் னையனுமே. (௫௬)

ஐய னளந்த படியிரு நாழிகொண் டண்டமெல்லா
முய்ய வறஞ்செயு முன்னையும் போற்றி யொருவர்தம்பாற்

செய்ய பசுந்தமிழ்ப் பாமாலையுங் கொண்டு சென்றுபொய்யு
மெய்யு மியம்பவைத் தாயிது வோவுன்றன் மெய்யருளே. (௫௭)

அருணாம் புயத்துமென் சித்தாம் புயத்து மமர்ந்திருக்குந்
தருணாம் புயமுலைத் தையனல் லாடகை சேர்நயனக்
கருணாம் புயமும் வதனாம் புயமுங் கராம்புயமுஞ்
சரணாம் புயமுமல் லாற்கண்டி லேனொரு தஞ்சமுமே. (௫௮)

தஞ்சம் பிறிதில்லை யீதல்ல தென்றுன் றவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைகின்றி லேனொற்றை நீள்சிலையு
மஞ்சம்பு மிக்கல ராகநின் றாயறி யாரெனினும்
பஞ்சஞ்சு மெல்லடி யாரடி யார்பெற்ற பாலரையே. (௫௯)

பாலினுஞ் சொல்லினி யாய்பனி மாமலர்ப் பாதம்வைக்க
மாலினுந் தேவர் வணங்கநின் றோன்கொன்றை வார்சடையின்
மேலினுங் கீழ்நின்று வேதங்கள் பாடுமெய்ப் பீடமொரு
நாலினுஞ் சாலநன் றோவடி யேன்முடை நாய்த்தலையே. (௬௦)

நாயே னையுமிங்கொ ருபொரு ளாக நயந்துவந்து
நீயே நினைவின்றி யாண்டுகொண் டாய்நின்னை யுள்ளவண்ணம்
பேயே னறியு மறிவுதந் தாயென்ன பேறுபெற்றேன்
றாயே மலைமக ளேசெங்கண் மாறிருத் தங்கைச்சியே. (௬௧)

தங்கச் சிலைகொண்டு தானவர் முப்புரஞ் சாய்த்துமத
வெங்கட் கரியுரி போர்த்தசெஞ் சேவகன் மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி கோகனகச்
செங்கைக் கரும்பு மலருமெப் போதுமென் சிந்தையதே. (௬௨)

தேறும் படிசில வேதுவுங் காட்டிமுன் செல்கதிக்குக்
கூறும் பொருள்குன்றிற் கொட்டுந் தறிகுறிக் குஞ்சமய
மாறுந் தலைவி யிவளா யிருப்ப தறிந்திருந்தும்
வேறுஞ் சமயமுண் டென்றுகொண் டாடிய வீணருக்கே. (௬௩)

வீணே பலிகவர் தெய்வங்கள் பாற்சென்று மிக்கவன்பு
பூணே னுனக்கன்பு பூண்டுகொண் டேனின் புகழ்ச்சியன்றிப்
பேணே னொருபொழு துந்திரு மேனிப்ர காசமன்றிக்
காணே னிருநில முந்திசை நான்குங் ககனமுமே. (௬௪)

ககனமும் வானும் புவனமுங் காணவிற் காமனங்கந்
தகனமுன் செய்த தவப்பெரு மாற்குத் தடக்கை யுஞ்செம்
முகனுமுந் நான்கிரு மூன்றெனத் தோன்றிய மூதறிவின்
மகனுமுண் டாயதன் றோவல்லி நீசெய்த வல்லபமே. (௬௫)

வல்லப மொன்றறி யேன்சிறி யேனின் மலரடிச்செம்
பல்லவ மல்லது பற்றொன்றி லேன்பசும் பொற்பொருப்பு
வில்லவர் தம்முடன் வீற்றிருப் பாய்வினை யேன்றொடுத்த
சொல்லவ மாயினு நின்றிரு நாமங்க டோத்திரமே. (௬௬)

தோத்திரஞ் செய்து தொழுதுமின் போலுநின் றோற்றமொரு
மாத்திரைப் போது மனதிலவை யாதவர் வண்மைகுலங்
கோத்திரங் கல்வி குணங்குன்றி நாளுங் குடில்கடோறும்
பாத்திரங் கொண்டு பலிக்குழ லாநிற்பர் பாரெங்குமே. (௬௭)

பாரும் புனலுங் கனலும்வெங் காலும் படர்விசும்பு
மூரு முருகு சுவையொளி யூறொலி யொன்றுபடச்
சேருந் தலைவி சிவகாம சுந்தரி சீறடிக்கே
சாருந் தவமுடை யார்படை யாத தனமில்லையே. (௬௮)

தனந்தருங் கல்வி தருமொரு நாளுந் தளர்வறியா
மனந்தருந் தெய்வ வடிவுந் தருநெஞ்சில் வஞ்சமில்லா
வினந்தரு நல்லன வெல்லாந் தருமன்ப ரென்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாளபி ராமி கடைக்கண்களே. (௬௯)

கண்களிக் கும்படி கண்டுகொண் டேன்கடம் பாடவியிற்
பண்களிக் குங்குரல் வீணையுங் கையும் பயோதரமு
மண்களிக் கும்பச்சை வண்ணமு மாகி மதங்கர்குலப்
பெண்களிற் றோன்றிய வெம்பெரு மாட்டிதன் பேரழகே. (௭௦)

அழகுக் கொருவரு மொவ்வாத வல்லி யருமறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத் தாள்பனி மாமதியின்
குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பிருக்க
விழவுற்று நின்றநெஞ் சேயிரங் கேலுனக் கென்குறையே. (௭௧)

என்குறை தீரநின் றேத்துகின் றேனினி யான்பிறக்கி
னின்குறை யேயன்றி யார்குறை காணிரு நீள்விசும்பின்

மின்குறை காட்டி மெலிகின்ற நேரிடை மெல்லியலாய்
தன்குறை தீரவெங் கோன்சடை மேல்வைத்த தாமரையே. (எஉ)

தாமங் கடம்பு படைபஞ்ச பாணந் தனுக்கரும்பு
யாமம் வயிரவ ரேத்தும் பொழுதெமக் கென்றுவைத்த
சேமந் திருவடி செங்கைக ணான்கொளி செம்மையம்மை
நாமந் திரிபுரை யொன்றோ டிரண்டு நயனங்களே. (எ௩)

நயனங்கண் மூன்றுடை நாதனும் வேதமு நாரணனு
மயனும் பரவு மபிராம வல்லி யடியிணையைப்
பயனென்று கொண்டவர் பாவைய ராடவும் பாடவும்பொற்
சயனம் பொருந்து தமனியக் காவினிற் றங்குவரே. (எ௪)

தங்குவர் கற்பக தாருவி னீழலிற் றாயரின்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை மால்வரையும்
பொங்குவ ராழியு மீரேழ் புவனமும் பூத்தவுந்திக்
கொங்கிவர் பூங்குழ லாடிரு மேனி குறித்தவரே. (எரு)

குறித்தேன் மனத்தினின் கோலமெல் லாநின் குறிப்பறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தே னவிழ்கொன்றை வேணிப் பிரானொரு கூற்றைமெய்யிற்
பறித்தே குடிபுகு தும்பஞ்ச பாண பயிரவியே. (எ௬)

பயிரவி பஞ்சமி பாசாங் குசைபஞ்ச பாணிவஞ்ச
ருயிரவி யுண்ணி யுயர்சண்டி காளி யொளிருங்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வராகியென்றே
செயிரவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே. (எஎ)

செப்புங் கனக கலசமும் போலுந் திருமுலைமே
லப்புங் களப வபிராம வல்லி யணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழுங்கடையுந்
துப்பு நிலவு மெழுதிவைத் தேனென் றுணைவிழிக்கே. (எ௮)

விழிக்கே யருளுண் டபிராம வல்லிக்கு வேதஞ்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண் டெமக்கவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே யழுந்துங் கயவர்தம் மோடென்ன கூட்டினியே. (எகூ)

கூட்டிய வாவென்னைத் தன்னடி யாரிற் கொடியவினை
யோட்டிய வாவென்க ணோடிய வாதன்னை யுள்ளவண்ணங்
காட்டிய வாகண்ட கண்ணு மனமுங் களிக்கின்றவா
வாட்டிய வாநட மாடகத் தாமரை யாரணங்கே. (௨௦)

அணங்கே யணங்குக ணின்பரி வாரங்க ளாகையினால்
வணங்கே னொருவரை வாழ்த்துகிலே னெஞ்சில் வஞ்சகரோ
டிணங்கே னெனதுன தென்றிருப் பார்சிலர் யாவரொடும்
பிணங்கே னறிவொன்றி லேனென்க ணீவைத்த பேரளியே (௨௧)

அளியார் கமலத்தி லாரணங் கேயகி லாண்டமுநின்
னொளியாக நின்ற வொளிர்திரு மேனியை யுள்ளுதொறுங்
களியாகி யந்தக் கரணங்கள் விம்மிக் கரைபுரண்டு
வெளியாய் விடினெங்ங னேமறப் பேனின் விரகினையே. (௨௨)

விரவும் புதுமல ரிட்டுநின் பாத விரைக்கமல
மிரவும் பகலு மிறைஞ்சவல் லாரிமை யோரெவரும்
பரவும் பதமு மயிரா வதமும் பகீரதியு
முரவுங் குலிசமுங் கற்பகக் காவு முடையவரே. (௨௩)

உடையாளை யொல்குசெம் பட்டுடை யாளை யொளிர்மதிசெஞ்
சடையாளை வஞ்சகர் நெஞ்சடை யாளைத் தயங்குநுண்ணூ
லிடையாளை யெங்கள் பெம்மா னிடையாளை யிங்கென்னையினிப்
படையாளை யுங்களை யும்படை யாவண்ணம் பார்த்திருமே. (௨௪)

பார்க்குந் திசைதொறும் பாசாங் குசமும் பனிச்சிறைவண்
டார்க்கும் புதுமல ரைந்துங் கரும்புமென் னல்லலெல்லாந்
தீர்க்குந் திரிபுரை யாடிரு மேனியுஞ் சிற்றிடையும்
வார்க்குங் குமமுலை யும்முலை மேன்முத்து மாலையுமே. (௨௫)

மாலயன் றேட மறைதேட வானவர் தேடநின்ற
காலையுஞ் சூடகக் கையையுங் கொண்டு கதித்தகப்பு
வேலைவெங் காலனென் மேல்விடும் போது வெளிநில்கண்டாய்
பாலையுந் தேனையும் பாகையும் போலும் பணிமொழியே. (௨௬)

மொழிக்கு நினைவுக்கு மெட்டாத நின்றிரு மூர்த்தியென்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற தால்விழி யான்மதனை

யழிக்குந் தலைவ ரழியா விரதத்தை யண்டமெல்லாம்
பழிக்கும் படியொரு பாகங்கொண் டாளும் பராபரையே. (அஎ)

பரமென் றுனையடைந் தேன்றமி யேனுமுன் பத்தருக்குட்
டரமன் றிவனென்று தள்ளப் பெறாததரி யாதவுணா
புரமன் றெரியப் பொருப்புவில் வாங்கிய போதிலயன்
சிரமொன்று செற்றகை யானிடப் பாகஞ் சிறந்தவளே. (அஅ)

சிறக்குங் கமலத் திருவேநின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கந் தருநின் றுணைவரு நீயுந் துரியமற்ற
வுறக்கந் தரவந் துடம்போ டுயிருற வற்றறிவு
மறக்கும் பொழுதென்முன் னேவரல் வேண்டும் வருந்தியுமே. (அகூ)

வருந்தா வகையென் மனத்தா மரையினில் வந்துபுகுந்
திருந்தாள் பழைய விருப்பிட மாக வினியெனக்குப்
பொருந்தா தொருபொரு ளில்லைவிண் மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தா னதைநல்கு மெல்லியலே. (கூ0)

மெல்லிய நுண்ணிடை மின்னனை யாளை விரிசடையோன்
புல்லிய மென்முலைப் பொன்னனை யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணந் தொழுமடி யாரைத் தொழுமவர்க்குப்
பல்லிய மார்த்தெழ வெண்பக டூரும் பதந்தருமே. (கூக)

பதத்தே யுருகிநின் பாதத்தி லேமனம் பற்றியுன்ற
னிதத்தே யொழுக வடிமைகொண் டாயினி யானொருவர்
மதத்தே மதிமயங் கேனவர் போன வழியுஞ்செல்லேன்
முதற்றேவர் மூவரும் யாவரும் போற்று முகிழ்நகையே. (கூஉ)

நகையே யிஃதிந்த ஞாலமெல் லாம்பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை மானே முதுகண் முடிவிலந்த
வகையே பிறவியும் வம்பே மலைமக ளென்பதுநா
மிகையே யிவடன் றகைமையை நாடி விரும்புவதே. (கூங)

விரும்பித் தொழுமடி யார்விழி நீர்மல்கி மெய்புளக
மரும்பித் ததும்பிய வானந்த மாகி யறிவிழந்து
சுரும்பிற் களித்து மொழிதடு மாறிமுன் சொன்னவெல்லாந்
தரும்பித்த ராவரென் றாலபி ராமி சமயநன்றே. (கூச)

நன்றே வருகினுந் தீதே விளைகினு நானறிவ
தொன்றேயு மில்லை யுனக்கே பரமெனக் குள்ளவெல்லா

மன்றே யுனதென் றளித்துவிட் டேனழி யாதகுணக்
குன்றே யருட்கட லேயிம வான்பெற்ற கோமளமே (கூரு)

கோமள வல்லியை யல்லியந் தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை யேதமி லாளை யெழுதரிய
சாமள மேனிச் சகல கலாமயில் தன்னைத் தம்மா
லாமள வுந்தொழு வாரெழு பாருக்கு மாதிபரே. (கூசு)

ஆதித்த னம்புலி யங்கி குபேர னமரர் தங்கோன்
போதிற் பிரமன் புராரி முராரி பொதியமுனி
காதிப் பொருபடைக் கந்தன் கணபதி காமன்முதற்
சாதித்த புண்ணிய ரெண்ணிலர் போற்றுவர் தையலையே. (கூஎ)

தைவந்து நின்னடித் தாமரை சூடிய சங்கரற்குக்
கைவந்த தீயுந் தலைவந்த வாறுங் கரந்ததெங்கே
மெய்வந்த நெஞ்சினல் லாலொரு காலும் விரகர்தங்கள்
பொய்வந்த நெஞ்சிற் புகவறி யாமடப் பூங்குயிலே. (கூஅ)

குயிலா யிருக்குங் கடம்பா டவியிடைக் கோலவியன்
மயிலா யிருக்கு மிமயா சலத்திடை வந்துதித்த
வெயிலா யிருக்கும் விசும்பிற் கமலத்தின் மீதன்னமாங்
கயிலா யருக்கன் றிமவா னளித்த கனங்குழையே. (கூகூ)

குழையைத் தழுவிய கொன்றையந் தார்கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந் தோளுங் கருப்புவில்லும்
விழையப் பொருதிறல் வேரியம் பாணமும் வெண்ணகையு
முழையைப் பொருகண்ணு நெஞ்சிலெப் போது முதிக்கின்றவே. ()

ஆத்தாளை யெங்க ளபிராம வல்லியை யண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் புவியடங்கக்
காத்தாளை யங்குச பாசாங் குசமுங் கரும்புமங்கை
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு தீங்கில்லையே. ()

அபிராமியந்தாதி முற்றுப்பெற்றது.

---

மெய்கண்டதேசிகன் றிருவடி வாழ்க.

திருமகள விலாசம் பிரஸ், சென்னை:—1987.

# புத்தகப் பிரகடனம்

| | ரூ. | அ. |
|---|---|---|
| சுகர் கைவல்லியம் மூலம் | 0 | 2 |
| ஔவைக்குறள் மூலம் | 0 | 2 |
| ஞான சிவவாதக் கட்டளை | 0 | 2 |
| உபநிடதம் உரையுடன் | 0 | 2 |
| சோணசைல மாலை | 0 | 2 |
| திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி | 0 | 2 |
| அபிராமியந்தாதி | 0 | 1 |
| சரஸ்வதியந்தாதி | 0 | 1 |
| பழமலையந்தாதி | 0 | 1 |
| விநாயகர் கவசம், சிவ கவசம், சக்தி கவசம், சரஸ்வதி தோத்திரம், லக்குமி தோத்திரம். | 0 | 1 |
| திருச்செந்தூர் சுப்பிரமணிய ரகவல் | 0 | 1 |
| நமச்சிவாய மாலை | 0 | 1 |
| மீனாக்ஷியம்மை பிள்ளைத் தமிழ் | 0 | 3 |
| திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் | 0 | 3 |
| கந்தரனுபூதி தெளிபொருள் விளக்க வுரையுடன் | 0 | 8 |
| கந்தரலங்காரம் தெளிபொருள் விளக்க வுரையுடன் | 0 | 8 |
| திருமுருகாற்றுப்படை விருத்தியுரையுடன் | 0 | 8 |
| குமரேசசதகம் தெளிபொருள் விளக்க வுரையுடன் | 1 | 0 |

எல்லா தமிழ் புஸ்தகங்களும் அடங்கிய கேட்லாக் வேண்டியவர்கள் தங்கள் விலாசத்தைத் தெரிவித்துப் பெற்றுக் கொள்ளலாம்.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கடாராமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.

உ

கணபதி துணை.

# அருணகிரியந்தாதி.

தெய்வத்தன்மைவிளங்கிய

## குகைநமசிவாயதேவர்

அருளிச்செய்தது.



இது

நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத்

தருமபரிபாலகர்

பொன்னம்பலபிள்ளையால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

ஏழாம் பதிப்பு.

பரிதாபி ௵ தை௴.

☞ இவ்வந்தாதி, மல்லிகார்ச்சுனத்திலிருந்து தெற்கே
சிவஸ்தலயாத்திரை செய்துவருகிறேனென்று தமது குருவினை
னுமதிபெற்றுக்கொண்டு சஞ்சரிக்கும்போது தமது குருவுரு
வாக வெழுந்தருளிய அண்ணாமலையார் சொற்படி திருவண்ணா
மலையிலே குகையினிடத்து மகிமையுடனிருந்த கன்னடமூர்த்தி
யாகிய குகைநமசிவாயதேவர் அவ்வண்ணாமலையார் வரப்பிரசா
தத்தினாலே அவரைத் தோத்திரஞ்செய்தது.

திருச்சிற்றம்பலம்.

# அருணகிரியந்தாதி.



## காப்பு.

சித்திதரும் புத்திதருஞ் சோதிருவைச் சேர்விக்கும்
பத்திதரு மெய்ஞ்ஞானம் பாலிக்குங்—கோத்தி
அரிமுகனைக் காய்ந்த வருணேசர் தந்த
கரிமுகனைக் கைதொழுதக் கால்.



கார்கொண்ட மேனியனுங் கஞ்சனுங் காணாப்பெருமை
ஆர்கொண் டுரைசெயவா ரம்புவியிற்—சீர்கொண்
டருணகிரி மேவுகின்ற வையாநீ வேண்டிக்
கருணைபுரி யாதிருந்தக் கால். (௧)

காலைமலர் தூவக் கருத்தறியா நாயேற்கு
வேலைவிட முண்ட விமலனே—மேலாய
வாசிகனே கணபலித்து வாழ்விக்குஞ் சோணகிரித்
தேசிகனே நீகண்டாய் திக்கு. (௨)

திக்குவே றில்லை திருவுளமே யல்லாமல்
இக்குவே ளைக்காய்ந்த வீசனே—மிக்கவிடந்
தன்னையுண்ட சோணகிரித் தாணுவே நாயேற்குப்
பின்னையுண்டோ நீயல்லாற் பேசு. (௩)

பேசுமவர் வஞ்சப் பிறப்பறுக்கு மென்றுலகில்
வீசுபுகழ்ச் சோணகிரி வித்தகா—மாசிலா
அண்ணா மலையானே யன்னைவயிற் றென்னையுருப்
பண்ணும லையாகண் பார். (௪)

பாராம னியிருந்தாற் பார்மீதி லுயேனுக்
காராவா சோணகிரி யண்ணலே—தீராப்
பிறப்பை யகற்றுதற்கும் பிஞ்ஞகனே சூழாத
இறப்பை யகற்றுதற்கு மின்று. (௫)

இன்றுபோ காவோ விருவினையு மும்மலமு
நின்றுதமி யேனை நெருக்காம—னன்றிதரும்
ஆரணனே சோணகிரி யந்தகனே மாறேறுங்
காரணனே நீநினைந்தக் கால். (௬)

காலன றனக்கஞ்சக் காரணமென் னெஞ்சமே
ஆல முகந்த வருணேசன்—கோலத்தை
நேசமுற்று நீகருதி னீங்காம னின்றலைக்கும்
பாசமுற்று நீக்கும் பரன். (௭)

பரமனீ யென்று பணிந்துருகிப் பாடிக்
கரஞ்சோத்து நீர்சோரக் கண்கள—வரங்கேட்ட
என்னவா வின்படியே யீந்தா யிதற்கருணை
மன்னவா காணேன்கைம் மாறு. (௮)

மாறுகொண்ட தக்கன் மனோரதமெல் லாந்தவிர்த்து
வீறுகொண்ட சோணகிரி வித்தகா—வாறுகொண்ட
செஞ்சடையாய் நின்னைத் தெரிசித்தல் வேண்டுமெனகண்
பஞ்சடையா முன்னே பரிந்து. (௯)

பரிந்தணிந்த வெண்ணீறும் பாம்புந்தீக் கண்ணும்
அரிந்தசிர மாலை யழகுந்—தெரிந்து
நெருக்குமாம் வல்வினையை நீக்குமரு ணேசற
கிருக்குமாங் கோலங்க ளேத்து. (௧௦)

கோலமுதற் றேடிநெஞ்சே கூப்பிட்டுங் காணாத
கோலங் குருவடிவு கொண்டேதா—ஞாலந
தரித்தபிரான் சோணேசன் றன்முனிந்து வேளை
எரித்தபிரான் வந்தா னிதென். (௧௧)

என்ன தவப்பயனோ வேழையேற் கென்றறியேன்
முன்னமறை காணாத முக்கண்ணா—நின்னையே
தேடுகைக்குஞ் சோணகிரித் தேசிகனே நின்புகழைப்
பாடுகைக்கும பெறற பயன். (கஉ)

பெற்றோரும் பலனைப பிறந்ததனா னெஞ்சமே
அரனோ மனத்தி லனவரதம்—பற்றுவார்
உள்ளலைக்குந தீவினையை யோட்டு மருணகிரி
வள்ளலைக்கொண் டாட வரம். (கங)

வரம்பலிக்கு மெய்ஞ்ஞான வாழ்வே பலிக்குந்
திரம்பலிக்குஞ் செல்வம் பலிக்கு—முரமபலிக்குஞ்
சோணா சலனைச் சுவாமிதனை யுள்ளத்தே
காணா கருத்தென் கருத்து. (கச)

கருத்தி லருணேசன் கஞ்சமலர்த் தாளை
இருத்தி நினைபபாரை யெனறும்—வருத்துமோ
நாட்டும் பலவுயிரை நாடோறும் பினறொடாநது
வாட்டும பிறவிநோய வன்பு. (கரு)

வன்பெருக்கிற் கன்மிதக்கும் வாயமுதலை பிள்ளைதரும
என்புருககொள் பெண்ணா யிருக்குமே—யன்பருக்கு
நாட்டுகுரு சோணகிரி நாதனடி யார்மூவர்
பாட்டினிசை கேட்ட பரம். (கசு)

பரமனரு ணேசன் பதம்பணியார்க் கென்றுங்
கருமஞ் சிதையுமெனல் கண்டோ—மருமநத
கூட்டுத் தலைபோயக் கொடியதக்கன் வேள்வியிலே
ஆட்டுத் தலையாகை யால். (கஎ)

ஆலம் வருவதுகண் டஞ்சி யமரர்குழாஞ்
சாலவெருண் டோடுஞ் சமயத்தி—லோலமென
நின்றா னுலகறிய நேசமடி யாரிடத்துக்
குன்றாத சோணகிரிக் கோ. (கஅ)

கோடிவிதி மாளிற் குலாவுகம லக்கண்ணன்
ஓடி வடவா லுறங்குமே—நாடுங்கால்
அக்கண்ணர் கோடி யழியி னருணகிரி
நக்கனருள் சற்றே நகும். (க௯)

நகுமானை யேந்தருளை நம்பா பிறப்பிற்
புகுவேனைக் காக்கும் புனிதா—தகுமேனைப்
பெற்றதுணை நீயல்லாற் பேருலகி னாயேனுக்
குற்றதுணை மற்றியாவ ரோது. (௨௦)

ஓதக் கடனஞ்சை யுண்டசோ ணாசலனை
ஓதக் கடனெஞ்சே யோதினாற்—பாதம்
பெறலா நமது பிணிமூப்புச் சாக்கா
டறலாங் கரையேற லாம். (௨௧)

ஆமென்று நம்பி யநுதினமும் போற்றினால்
நாமென்று பற்றி நலமாகக்—காமித்துச்
சிட்டாகுஞ் சோணகிரி சிந்தித்தா னெஞ்சமே
விட்டேகும் வெய்ய வினை. (௨௨)

வெய்ய பிறவிதனை வேரறுக்குஞ் சோணகிரி
ஐயரடி யார்பாட்டிற் கல்லாமற்—றுய்யகரா
வாய்க்குமோ பிள்ளையுந்தண் வாரிதியிற் கன்மிதந்து
காய்க்குமோ வாண்பனையுங் காய். (௨௩)

காய நெகிழாமுன் கண்க ளிருளாமுன்
வாயிலுள்ள பல்லும் விழுவாமுன்—காயம்பார்த்
தோடிநமன் வாராமுன் னுள்ளமே சோணகிரி
நாடிநம வென்றே நட. (௨௪)

நடக்குங் குலங்கல்வி நம்மவென்பா ராசை
அடக்கும் வகைசற் றறியார்—தொடுக்குநூல்
காட்டுமோ சோணேசன் கஞ்சமலர்த் தாளிணையைக்
கூட்டுமோ சொல்லீர் குலம். (௨௫)

குலமில்லார் வண்மைக் குணமில்லார் கல்வி
நலமில்லா ராஞலு நன்றே—வலம்வந்
தரிய திருவருணை யண்ணலுக்கா ளாவார்
பெரியவர்க்கு மேலான பேர். (உசு)

பேரும் பெருவாழ்வும் பிள்ளைகளும் வேண்டுவார்
ஆரும் பரவு மருணேசன்—சீரை
உறக்கத் திலுமறக்க வொண்ணு துரைக்கிற்
பிறக்கக் கிடையாது பின். (உஎ)

பின்னறியேன் முன்னறியேன் பேதையேன் பாமாலை
என்னறியேன் சோணகிரி யீசனே—நின்னருளைக்
கொண்டுரையா நிற்குங் குறியுங் குறிதேடுங்
கண்டுரையா தென்றன் கருத்து. (உஅ)

கருத்தறிந்த மெய்யடியார் கண்காண வெள்ளை
எருத்தில்வருஞ் சோணகிரி யீசா—பருத்த
வலங்கார நால்வேத வனந்தலையு ளானைக்
கலங்காம னீயறுத்தாய கண்டு. (உகூ)

கண்டுமினை யென்பார் கருத்துநா வும்வாழி
அண்டர்கோ வேயருணை யண்ணலே—விண்டுவாஞ்
சங்கையெடுத் தோன்கண் சரணத்திற் சாத்துமுனறன்
செங்கையிலே வேதன் சிரம். (௩0)

சிரமாலை தானணிந்து சேவிலுகந் தேறி
அருமா மறைதேடு மண்ணல்—வருமா
முனிக்கூட்டம் போற்று முதல்வனரு ணேசன்
இனிக்கூட்டான் றனபத் தெமை. (௩க)

எமையாளுஞ் சோணகிரி யீசாநின் பாகத்
துமையாளு நீயு முகந்த—சமயத்
திருக்கின்ற கோலத்தை யான்காண வேண்டி
இருக்குங் கருணைசெய்வா யென்று. (௩உ)

என்றுமரு ணேச விருபதத்தை நம்பாதார்
குன்றில் வனத்திற் குகையதனிற்—சென்று
திரிந்தேன் பலமருந்து தின்றுசில காலம்
இருந்தே னிராமலிருந் தேன். (௫௩)

ஏனமனந் தேட வினையடியுஞ் சீர்முடியுந்
தானவற்றிற் கெட்டாத தாணுவா—ஞானத்
தழல்கண்ட மேனித் தலைவனரு ணேசன்
கழல்கண்டார் காணார் கரு. (௫௪)

கருமா முகில்வண்ணன் கஞ்சனுக்கு மெட்டாப்
பெருமான் விடையேறும் பெம்மா—னொருமான்
மழுவேற்குஞ் சோணகிரி மன்னனடி யாரைத்
தொழுவேற்கு முண்டோ துயர். (௫௫)

துயர்கொண்டு நாளுந் தொலையாப் பிறப்பில்
அயர்கின்ற நாயேறகு மாமோ—வுயர்தவத்தோர்
ஆரும் பரவு மருணேச ரம்புயத்தாள்
சேருங் கருத்தொருக்காற் செப்பு. (௫௬)

செப்பரிய மால்பிரமர் சிந்தைதனக் கெட்டாத
அப்பரிய சோணகிரி யப்பனே—யெப்பொழுதும்
பெண்ணைவிட்டு நீங்காநின் பேரழகு சந்ததமென்
கண்ணைவிட்டு நீங்காது காண். (௫௭)

காணா ரரிபிரமர் கஞ்சமலர்த் தாளிணையை
நாணமற் றுன்காண நாடியே—சேணுடர்
ஆயும் புகழருணை யண்ணா மலையானே
மாயுந் தமியேன் மனம். (௫௮)

மனத்திற் பயமறிந்து மாமுனிவர்க் காகச்
சினத்திற் புரமெரித்த சீமா—னனத்தனருள்
தக்கன் றலையறுத்த தாணு வருணகிரி
நக்கன் றனைமனமே நம்பு. (௫௯)

நம்பியிரு நெஞ்சமே நாளு மருணகிரி
உம்பர்கோ னன்றுரைத்த வுண்மையை—நம்பிக்
கெடுத்தாலுஞ் சோணேசன் கேடுபடா தெம்மை
எடுத்தாலுஞ் சோணேச னென்று. (௪௦)

எனறுதரு வாயமகிழ்ந்தே யான்பெறுவ தெந்நாள்
இன்று தமியேற் கியம்பிடாய—நன்றிதரும்
ஏகனே சோணகிரி யீசனே சேவேறும்
வாகனே சாகா வரம். (௪௧)

சாகா வரம்பெறலாஞ் சந்ததமுஞ் சோணகிரி
நாகா பரணன்று ணடியே—யேகாந்த
நண்ணுமக்க மாலைகொடு நாவார வைந்தெழுத்தை
யெணணு மறவா தெடுத்து. (௪௨)

எடுத்த பயனே யிருவினையை யெண்ணார்
அடுத்தசிவ பூசை யறியார்—தொடுத்த
நெறியாகுஞ் சோணகிரி நித்தரடி யாரை
அறியாத மானுடவ ரச்சு. (௪௩)

அச்செல்லா மொன்று வதிலே யிருவகையா
வைச்சதென்ன சோணகிரி வள்ளலே—யிச்சையிலே
வாழ்ந்துசில பேரிருக்க வாய்புதைத்துக் கைகட்டித்
தாழ்ந்துசில பேரிருக்கத் தான். (௪௪)

தானே யுமைகுடையோன் றன்னசைவே பல்லுயிர்க்கு
தானே யனைவர்க்குந் தாதைதாய்—தானே
அனைத்துயிருங் காக்கு மருணேச னென்றன்
மனத்துயரம் போவதே மாண்டு. (௪௫)

மாண்டு பிறந்துழலு மாப்பிணியை நீக்குதற்கு
வேண்டு மருந்துனக்கு வேண்டினு—லீண்டுலகில்
வீணேசர் சொல்லை விரும்பாம னெஞ்சமே
சோணேச ரென்றொருக்காற் சொல். (௪௬)

சொல்லரிய நால்வேதஞ் சொன்னபடி பேசுருதி
நில்லரிய பூசையிலே நேசமா—வெல்லரிய
நஞ்சே தரித்தருளு நாதரடித் தாமரையை
நெஞ்சே மறவாம னீ. (சஎ)

நீயே வரல்வேண்டு நின்னைப்போ லானதுணை
நாயேனுக் கியாருண்டு நாடுங்காற்—றூயகமாம்
அண்ணா மலைமேவு மப்பனே யென்பிறவிப
புண்ணா மலையகற்றும் போது. (சஅ)

போதுமதி சூடும் புனிதர் புவியீன்ற
மாதுபங்க ரண்ணா மலைநாதர்—பாதம்
இறுகப் பிடிமனமே யெந்நாளு நின்னைக்
குறுகப் பயப்படுமே கூற்று. (சகூ)

கூற்றிருக்கு முன்காலிற் கூறு புறங்காலில்
ஏற்றிருக்கு மாயவன்க ணெப்பொழுதுஞ்—சாற்றுகையில்
அம்புயத்தோன் கம்பிருக்கு மண்ணா மலைநாதன்
செம்புயத்திற் காரிணையாஞ் செப்பு. (ருo)

செப்பரிய ஞானச் செழுஞ்சுடரே சோணகிரி
அப்பனே நன்னூ லறிந்தானு—மிப்புவியிற்
கொண்டகுரு வைப்பொருளாக் கொள்ளார் பயனேது
கண்டவெல்லாம் வீணிலே கற்று. (ருக)

கற்றதனாற் றொல்லைவினைக் கட்டறுமோ நல்லகுலம்
பெற்றதனாற் போமோ பிறவிநோ—யுற்றகடல்
நஞ்சுகந்து கொண்டருணை நாதரடித் தாமரையை
நெஞ்சுகந்து கொள்ளா நெறி. (ருஉ)

நெறியுண்டா நல்ல நிலையுண்டா ஞானக்
குறியுண்டா மெண்ணமெலாங் கூடுஞ்—செறிவுண்டாம்
ஆதி யருணகிரி யண்ணலா ரைந்தெழுத்தை
ஓதிமட நெஞ்சமே யுன். (ருங)

உன்னக் கருத்துண் டுரைப்பதற்கு நாவுண்டு
பன்னச் சிவநூல் பலவுண்டு—முன்னமறைக்
கெட்டாத சோணகிரி யீசனிரு தாள்பணிய
வொட்டாது பாவ முயர்ந்து. (௫௪)

உயர்ந்தவர்க்கு ளெல்லா முயர்ந்திருக்குங் கோவே
நயந்தபுகழ்ச் சோணகிரி நாதா—பயந்தமரர்
உண்ணப்ப டாநஞ்சை யுண்டவுனைச் சாமவரோ
டெண்ணப் படுவா ரிதென். (௫௫)

என்ன சனன மெடுத்தார் புவிமீதில்
அன்னமிடா ரின்சொல் லறிகிலார்—முன்னமே
ஒன்னார் புரமெரித்த வுண்ணா முலைபாக
என்னார் திருநீ றிடார். (௫௬)

நீறிடே னைந்தெழுத்தை நேசமுட னேகருதிக்
கூறிடே னென்னையுமாட் கொள்வதனுக்—காறணிந்த
வேணியார் சோணகிரி வித்தகனார் வெற்றிமழுப்
பாணியார்க் கன்றோ பரம். (௫௭)

பரகதிக்கு வித்தாமுன் பஞ்சாக் கரத்தைப்
பரபரப்ப வெண்ணாத பாவ—நரகப்
பிறப்பிற்கு மீடாப் பிறந்தருணை யீசா
இறப்பிற்கு மீடாயி னேன். (௫௮)

ஏனிருந்து நெஞ்சே யிரவுபக லாயுடலைத்
தானொறுப்பாய் சோணகிரித் தாணுவா—மானுகந்த
எந்தையா னிங்கு மிருவினைநோய் சிந்திக்குஞ்
சிந்தையால் வேறென் செயல். (௫௯)

என்செயலாஞ் சோணேச ரிட்டபடி யேயொழிய
நெஞ்சையெலாம் புண்ணா நினைந்தாலும்—விஞ்ச
வருமோ பெருவாழ்வு வல்லமையா னெஞ்சந்
தருமோநம் பேராசை தான். (௬௦)

தானே யெனக்குத் தவமாய்த் தவப்பயனாய்த்
தானே யெனக்கன்னை தாதையாய்த்—தானென்னைச்
செப்பரிய நினபாதஞ் சேர்விக்குஞ் சோணகிரி
அப்பனே நீயேறு மான். (௬௧)

ஆனவர நல்குநதி யாயிரஞ்சென் றூடுகிலென்
தானம் பதினாறுந் தான்செயினென்—ஞானங்கள்
அஞ்சுடையான் சோணகிரி யண்ணலனை யெண்ணாத
நெஞ்சுடையார் பூதலத்தே நின்று. (௬௨)

நின்று தவம்புரியாய் நெஞ்சே திருக்கோயில்
சென்றுசிவ பூசையறஞ் செயதிடாய—வென்றிதரும்
அம்மான் கரத்த னருணேச னம்புயத்தாள
சும்மா கிடைக்குமோ சொல். (௬௩)

சும்மா கிடைக்குமோ சோணு சலன்பாதம்
அம்மால் விரிஞ்ச னறிகிலா—நம்மால்
இருநதகதை சொன்னக்கா லென்னாகு நெஞ்சே
பொருந்த நினையாத போது. (௬௪)

போதையிரு பல்லுகுத்துப் புண்டரிகன் றேவியெனு
மாதையன்று மூக்கரிநத மாவீரன—றூதை
விருப்பா மதிசூடி வெண்டலையோ டேந்தி
இருப்பா னருணேச னின்று. (௬௫)

இன்றைக்கு நாளைக் கிரவிற் கெனுந்துயரம்
என்றைக்குப போமருணை யீசனே—கொன்றைமதி
புன்னை யெருக்கும் புனையுஞ் சடாடவியாய
என்னை நெருக்கு மிவை. (௬௬)

நெருக்குமிவை யென்னுயிரை நீங்காமற் சூழ்ந்தே
இருக்கும் பலபிணிநோ யெல்லா—மூருக்குமயகை
கண்டே னருணேசன் கஞ்சமலர்த் தாள்கருத்திற்
கொண்டே னெனக்கென் குறை. (௬௭)

குறையேது மில்லையினிக் கூறுங்கால் வானோர்க்
கிறையாகுஞ் சோணேசற கென்று—மறைபுகுந்தேம்
பறறி நமன்றொடரான் பார்ககுங்கா னெஞ்சமே
வெற்றிநமன் கைத்தலைத்து வேலை. (கூகூ)

வேலைவிட முண்ட விமலரருணேசர்கொன்றை
மாலையணி மார்பர் மலாபபதத்தை—மேலமரர்
பணணினர் பூசையறம் பண்ணிய பரகதியில
நண்ணினு ரெல்லா நலம். (கூக)

எல்லார் பிறபபு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற றெளிநதேநஞ் சோணேச—னில்லிற்
பிறநதகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்நதுண்
டிறந்தகதை யுங்கேட்டி லேம். (எ0)

ஏயாந்த சோணகிரி யீசரடி யாரடிக்கே
பூமா மலர்தூவிப் போற்றுதார்—தாமென்றும்
வெஞ்ச மனத்திருக்கும் வேடராய நாடோறும
வஞ்சநம னுக்கஞ்சு வார். (எக)

வஞ்சநம னுக்கஞ்சி வாடுந் தமியேனை
அஞ்சலெனற சோணகிரி யண்ணலே—நெஞ்சறிய
ஆண்டகுரு நீயென் றறியாதார் செயததவ
மாண்டமரத் திற்கனைத்த மண். (எ௨)

மண்ணிற பிறந்திறந்து மாயுந்தெய் வங்களோ
டெண்ணப் படாவருணை யீசனே—விண்ணப்பம்
ஒன றுண் டடியே னுனைப்பிரியா தேயிருக்க
என்று தருவா யெனக்கு. (எ௩)

தருவா யெனக்குகந்துன் றன்னிருதா டன்னை
மருவார் புரமெரித்த மன்னு—குருவாகி
முனனை வினையகறறி மூர்ததி யருணேச
என்னைப பொருளா வெடுத்து. (எச)

மகாமஹோபாத்யாய, டாக்டர்
[illegible] நூல் நிலையம்

எடுப்பானுங் காப்பானு மேற்பானு மேற்பக்
கொடுப்பானு மேதுங் கொடானும்—விடப்பானம்
பண்ணி யநேகர் பயங்கெடுத்த சோணகிரிப்
புண்ணியனே நீகாணிப் போது. (எரு)

இப்போது பின்னைக் கிலையென் றிரப்போரை
எப்போதுந் தள்ளா திரங்கியே—முப்போதும்
பூசிப்ப தென்னாள் புனிதனே சோணகிரி
நேசிப்ப தென்னா ணினைந்து. (எசு)

நினையேன் றிருக்கோல நின்றுகண்ணீர் சோர
நனையேன் பிறப்பறுக்க நாடேன்—புனையேனின்
பொன்னடிக்குப் பூமாலை போற்றி யருணேச
பின்னடிக்கிங் காருதவும் பேர். (எஎ)

பேரா யிரமுடைய பெம்மானைச் சோணகிரி
ஆரா வமுதை யறியாமல்—வாராது
தீது நலமுந தெரியுங்கா னெஞ்சமே
ஏதுமவ னென்றே யிரு. (எஅ)

இருந்துநினைப் பார்த மிருவினையை நீக்கும்
பொருந்துமிடி யிம்மையிலே போக்கு—மருந்தன்றோ
தம்பிரா னெவ்வுயிர்க்குந தானு மருணகிரி
எம்பிரா னோரஞ் செழுத்து. (எகூ)

அஞ்செழுத்தை யோதுமவர்க் கஞ்சி யவர்தலையிற்
றுஞ்செழுத்தைக் கஞ்சன் றுடைக்குமே—யஞ்சுதலைக்
கொன்றறுத்து நாலா வொருகுறையா நின்றதலை
இன்றறுப்பான் சோணேச னென்று. (அ௦)

என்றுநமன் றூதுவரை யேற்கவே தானழைத்து
நின்றுரைக்குஞ் சோணகிரி நித்தனார்க்—கின்றடிமை
யானவர்க்கு நீர்வணங்கி யப்பாலே போமென்று
தானவர்க்குப் புத்தியாத் தான். (அக)

புத்திதருஞ் சோணேசன் பொன்னடியை வாழ்த்துநர்க்குப்
பத்திதரு மெய்ஞ்ஞானம் பாலிக்கு—முத்திதரு
மாற்றரிய தீவினையை மாற்றுவிக்கு மைந்தெழுத்தைப்
போற்றரிய நெஞ்சமே பூண்டு. (௮௨)

பூண்டவகைக் கெல்லாம் பொருந்துமணி முத்திருக்க
வேண்டும் பசும்பொன் விளைவிருக்கத்—தீண்டாமற்
பொங்கரவுந் தோலெலும்பும் பூண்டாயி தென்னருணைச்
சங்கரா கங்கா தரா. (௮௩)

கங்கா தரனே கடையேனை யெந்தநாள்
அங்கா தரவா வழைக்குநா—ணங்காதல்
பார்க்குநாள் சோணேச டார்த்துப் பரகதியிற்
சேர்க்குநா ளெந்தநாள் செப்பு. (௮௪)

செப்பரிய வாணவத்தைச் சேதமுறு மும்மலத்தை
ஒப்பிலாச் சஞ்சிதத்தை யோட்டினே—னிப்போ
தருவாகி நின்ற வருணகிரி யானைக்
குருவாக வென்னுளத்தே கொண்டு. (௮௫)

கொண்டநெறி சறறுங் குலையார் மனத்திருக்கும்
அண்டர்கோ வேயருணை யண்ணலே—தொண்டர்க்
கிடையாது நெஞ்ச மிருவினையா லென்றும்
அடையா தெழுபிறப்பா மல. (௮௬)

அல்லதொரு தெய்வ மறியே னறிந்தாலும்
நல்லதென்று நெஞ்சகத்தி லுடேன்யான்—சொல்லரிய
அண்ணா மலைமேவு மண்ணலையு மண்ணலிடத்
துண்ணா முலைபாலை யும். (௮௭)

உம்மை நினைந்தே யுருகி யருணேசர்
தம்மை நினைநதார் தமக்கல்லா—லிம்மையிலே
எல்லாருங் காண வெளிதோ புவிமீதில்
நல்லார் துதிக்கு நடம். (௮௮)

மகாமகோபாத்யாய, டாக்டர்

கடலையறுத் தாளருணை நம்பனுக்கன் பில்லார்
உடலையொறுத் தாலாவ துண்டோ—வடலைநூல்
ஓதினுற் பாச மொழியுமோ புற்றிலே
மோதினுற் பாம்புசா மோ. (அக)

யோகமறேன் சோணகிரி மூர்த்தியே மும்மலத்தின்
ருகமறே னின்பெருமை தானறியேன்—காகநாய
தம்மதென் னுங் காயத்தைத் தானெடுத்துத் தாரணியில்
நம்மதென் றுங் கண்டாய நரி. (க0)

நரிக்குப் பொதிசோறு நான்சுமந்து நொந்தேன்
அரிக்கு மரிதா மரனே—தெரிக்குமறை
காணுத சோணகிரிக் கண்ணுதலே நின்பதத்தைப்
பேணுத நாயேன் பிறந்து. (கக)

பிறந்திறக்குந் தெய்வப் பிணங்களைக்கொண் டாடேன்
அறந்தழைக்கு நு சோணகிரி யாரே—பிறந்திறவா
உம்மைப் புகழ்ந்தே யுமக்கடிமை யானபேர்
தம்மைப் புகழ்வதல்லாற் றுன். (கஉ)

தானவர்கண் முப்புரத்தைத் தானெரித்து நஞ்சுகந்தீர்
வானவர்க்காச் சோணகிரி வள்ளலே—யேனம்
விருப்பா மலர்சூடி வேண்டினு னீண்ட
நெருப்பா விருநததென்ன நீர். (கங)

நீராழி நஞ்சுகந்த நித்தனே சோணகிரி
ஆரா வமுதேயென் னையனே—பாராளுந்
தாதையே பூசையறந் தானறியா மற்றிரியும்
பேதையேற காராவார் பின். (கச)

பின்னை யொருவரில்லை பேருலகிற் றஞ்சமா
அன்னாந் தருமருணை யையரே—யென்னை
எடுப்பதற்குங் காப்பதற்கு மென்பிறவி நோயைக்
கெடுப்பதற்கு நீரே கேண்மீர். (கரு)

நீரகொண்ட வேணி நிமலாவென் னீள்பிறப்பை
ஆரதொலைப்பார் நீயல்லா தாயுங்காற்—பார்மீதிற்
பொய்யா வரங்கொடுக்கும் புண்ணியனே சோணகிரி
ஐயா கருணலயா. (கசு)

கருணலயா நின் கழல்பணிய மாட்டேன்
அருணசலாவென் றழையேன்—மரணந்த
காலத்தி லோதுங் கருத்தறியேன் கண்ணையுன்றன்
கோலத்தில் வையேன் குறித்து. (கஎ)

குறியே னிருபதத்தைக் கூறும் வகைசற்
றறியே னறிந்தவர்க்கொன் றற்றேன்—சிறியேனின்
றுயுமறை தேடரிய வண்ண மலையானே
மாயுமிருந் தையா மனம். (கஅ)

ஐயா மரப்பாவை யாடுவதுஞ் சூத்திரிதன்
கைவாசி யோபாவை கற்றதோ—வெய்யவினை
என்னிச்சை யோவருணை யீசா படைத்தளிக்கும்
உன்னிச்சை யன்றோ வுரை. (கக)

உரைக்கு மடியா ருயிர்ப்பயிர்வா டாமற்
றரைக்குளா னந்தவெள்ளந் தன்னை—நிரைக்குமே
எண்ணா புரமெரித்த வெந்தை யருணகிரிக்
கண்ணா ரமுதமெனுங் கார். (க00)

அருணகிரியந்தாதி முற்றுப்பெற்றது.

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.

உ

சிவமயம்.

சிவசண்முகன் றுணை.



# ஆதிவயலூர் வெண்பா

# அந்தாதி

திரிசிரபுரம்,
வித்துவான், அமிர்தம், சுந்தரநாதபிள்ளை
இயற்றியது.





திருச்சி:
சதான் ஸ்டார் பிரஸ்.
1918.

 விலை அணா 4.

சிவமயம்.



சிவசண்முகன் றுணை.

# ஆதிவயலூர் வெண்பா

# அந்தாதி.

திரிசிரபுரம்,

**ஸ்ரீமான், வித்துவான், அமிர்தம், சுந்தரநாதபிள்ளை அவர்கள்**

இயற்றியது.

திரிசிரபுரம்,

ஹிந்து சேவிங்ஸ்பாங்கு மானேஜரும், மிராசுதாருமாகிய

ஸ்ரீமான், **T. R. இராமநாராயண பிள்ளை அவர்களால்**

அச்சிடப்பெற்றது.

காளயுக்தி ஆண்டு, கார்த்திகைத் திங்கள்.

1918

சிவமயம்.

சிவசண்முகன் றுணை.

# முகவுரை.



நிலவுலகத்தே, மிகவுங் கொண்டாடப்பெறுஞ் சுப்பிரமணிய சுவாமி இன்புடன் எழுந்தருளியிருக்குந் தலங்களுள் "வயலூர்" என்பது ஒன்றாகும். இது மிகப் பழமையான தலம். அருணகிரி நாதரும் இதனைப் புகழ்ந்து பாடியுள்ளார். இத் தலத்திலேதான், அருணகிரி நாதருக்குச் சுப்பிரமணியர் இரண்டாம் முறை காட்சிதந்து உபதேசித்தருளியது என்பர். இதனை, அருண கிரி நாதர் திருவாய்மலர்ந்தருளிய திருப்புகழிற்கண்டுதெளியலாம்.

இவ்வருமைத்திருத்தலம், திரிசிரபுரத்துக்கு ஆறுமைலுக்கு மேற்கே காவிரியாற்றிற்குத் தென்பாலுஞ் சர்ப்ப நதிக்கு வடபாலு மமைந்துள்ளது. இத்தலத்திலேதான், ஸ்ரீசுப்பிரமணியப்பெருமான் தந்தைக்கே குருவாய மாசகலத்தன தந்தையாகிய ஆதியைப் பூசித் ததாம். இத்தலத்துத்திருக்கோயிலினுள் வன்னி விருட்சமும், கோயி லுக்குக் கிழக்கில் சுமார் இருபது கஜதூரத்தே குமார தீர்த்த மென் றும் அக்கினி தீர்த்தமென்றுஞ் சொல்லப்படுந் திருக்குளமும் அமைந் திருக்கின்றன. குளத்து வடமேற்கு மூலையிற் றேரும், தேருக்குச் சமீபத்துக் கருப்புத்தேவும் பொருந்தியிருக்கின்றன. இத்தலத்தே மால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களும்: திருமகள், வாணி, இந்திராணி முதலிய தேவதைகளும்: சூரியன், சந்திரன், அக்னி யாய முச்சுடர்களும் பூசித்துப்பேறு பெற்றிருக்கின்றனர். சூரியன் முத லிய முச்சுடர்வழி வந்த மன்னர்கள் பலர் பூசித்துப் பேறுபெற்றிருக் கின்றனர். இதன் விரிவெல்லாம் எம்மாற்பாடப்பெற்ற, வடமொழிப் புராண மொழிபெயர்ப்பாகிய "வயலூர்ப் புராணத்தால்" நன்கறிய

லாம். இத்தலத்தெழுந்தருளியிருக்குஞ் சுப்பிரமணியக்கடவுளுக்கு : வயலூரன், வயலூர்க்குமரன், ஆதிவயலூர்க்குமரன், மேல்வயலூர்க் குமரன், ஆதிக்குமரன், வன்னிதலக்குமரன் எனப்பலதிருநாமங்கள் வழங்கிவருகின்றன. இத்தலத்துச்சிவபிரானுக்கு: அக்கினேசுரர், குமாரபூஜிதநாதர், வயலூர் ஆதிநாதர் எனப்பலதிருநாமங்கள் வழங்குகின்றன. தேவியாருக்கும: பூர்வஸ்திதிநாயகி, குமாரபூஜிதநாயகி, வயலூர் ஆதிநாயகி எனப்பல திருநாமங்கள் வழங்கிவருகின்றன. இத திருத்தலத்துக்கும் ஆதிவயலூர், மேல்வயலூர், குமாரவயலூர், வன்னிவயலூர், அங்கிபூஜிதவயலூர் எனப்பலதிருநாமங்கள் வழங்கி வருகின்றன.

இத்தலம் மிகமகத்துவம வாய்நததும, இட்ட காமியங்களை ளிக்கும் பெருமை பெற்றதுமாம். இதன் விரிவெல்லாம் எம்மாற் பாடப்பெற்ற புராணததிற்கண்டு தெளியலாம்.

இததலத்தில் எழுந்தருளியிருக்குஞ் சிவ சுப்பிரமணியக்கடவுள் பேரில் யாவரும் எளிதிற்படிததுததெரியக்கூடிய செந்தமிழால தோத்திரரூபமாக வெண்பாவால் ஓரந்தாதி பாடவேண்டுமென்று பலநண்பாகள் கேட்டுக்கொண்டபடியாலும், என் ஆதம நண்பரும், *வெண்சுதை வியாபாரியும, சோழக்ஷத்திரிய பரம்பரையினரும், மிராசுதாரும ஆகிய பாலக்கரை இடைததெரு ஸ்ரீமான், பெருமாள் பிள்ளை அவர்களின் மூத்த குமாரராகிய, ஸ்ரீமான், மதுரைநாயகம் பிள்ளை அவர்களும், திரிசிரபுரம், ஸ்ரீமான் †வைத்திலிங்கம் பிள்ளையவர்களும இடைவிடாது தூணடி உற்சாகப்படுத்தியமையாலும் இந்நூல் வெளியாயிற்று. இவர்களுக்கு என்றும் நன்றிபாராட்ட நான் கடமைப்பட்டுளேன்

*வெண்சுதை = சுண்ணாம்பு. †62வது, வெண்பாவிற் குறிக்கப்பட்டவர் இவரே.

இதனை, அச்சிடப்பொருளின்றி மயங்கிய காலத்து, "என்னே மயக்கம்! கவலறக! எத்தனையாயிரந் தமிழ்நூல் நீங்கள் பாடினும் அதனை நானே அச்சிரதமேற்றி, உலகெலாம் உலாவிக்கற்றூர் உளக் கோயிலிலமரவைக்கின்றேன்." என்று, உறுதிபுகன்று, அச்சிட்டரு ளியவர்கள், எனதின்னுயிர் நண்பரும், மிராசுதாரும், திரிசிரபுரம் இந்து சேவிங்ஸ் பாங்கு மானேஜரும், சிராமலைத் தாயுமானவர் மேல் "திரிசிராமலைக்கோவையைப்" பாடும்படிக் கேட்டுத்துறைக்கோர் பொற்காசு வீதம் பல நூறறுக்கணக்காகப்பெரும் பொருடந்து சன் மானித்த வள்ளலுமாகிய ஸ்ரீமான், இராமநாராயணப்பிள்ளை அவர் களே. இவர்புகழ, திரிசிராமலைக்கோவையுள்ளும், அந்நூலின் முக வுரையினும் பரவ நிற்றல், காண்பார்க்குக் களிப்பைத்தராதிராது. இப்பெரும்வள்ளலை என் மனதார வந்தனஞ்செலுத்தி வாழ்த்துகின் றேன். இவ்வள்ளலைப் பற்றித் திரிசிராமலைக்கோவையிற் கூறியிருக் கும் பல பாடல்களுள் ஒருபாட்டை, ஈண்டு மாதிரிக்கு எடுத்துக் காட்டுதூஉம்.

தலைவன் இன்றியமையாமை இயம்பல்.

"இரப்பார்க் கருள்செய ராமநா ராயண னென்றுமுளன்
புரப்பார் தமையும் புரக்கச் சிராமலைப் புங்கவனுண்
டிரப்பார் விரகவென் வெம்பசிக் கின்னமு தோர்ந்தருளாற்
றரப்பா ருளீர்நீ ரிலையே லுயிரென்னுட் டங்கரிதே."

இவ்வயலூர் அந்தாதியைக்கண்டு கேட்ட வித்துவான்கள் சிறப் புப்பாயிரந்தந்து சன்மானித்துளர். அதுவும், இந்நூலின் முன்பாகத் தில் அச்சிட்டிருக்கின்றும். அவர்களுக்கும் என் வந்தனத்தைச் செலுத்தி நன்றி பாராட்டுகின்றேன். இந்நூலைப் படித்துப்பார்த்து அடங்கா மகிழ்கொண்டு பெரும் பொருள் சன்மானித்து, அரங்கேற் றுதற்கேற்பாடு செய்த ஒருவர்தூர், ஸ்ரீமான், சொக்கலிங்க முதலி யார் அவர்களின் குமாரரும், சோமரசம்பேட்டை ஸ்ரீமான், சீனிவாச

முதலியாரவர்களின் மருகருமாகிய * ஸ்ரீமான், சதாசிவ முதலியார் அவர்களுக்கும், மேல் வயலூர், ஸ்ரீமான் வீரமுத்து நாட்டார் குமாரர், ஸ்ரீமான், முத்துவீர நாட்டாருக்கும், கீழ்வயலூர், ஸ்ரீமான் முத்துசாமி நாட்டார் குமாரர், ஸ்ரீமான், முத்துக்கருப்ப நாட்டாருக்கும், வயலூர் மாஜி கிராம முனிசிப், ஸ்ரீமான், தங்கய்ய நாட்டாருக்கும். சோமரசம்பேட்டை சரஸ்வதி விலாசத தமிழச்சங்கத்தார்களுக்கும், எரிமங்கலம், ஸ்ரீமான், காத்தப்பெருமாள் பிள்ளை அவர்களுக்கும், கருப்பூர், ஸ்ரீமான், கிருஷ்ணக்கண்காணியாரவர்களுக்கும், திருக்கற்குடி, ஸ்ரீமான், மு. ராஜுப்பிள்ளை அவர்களுக்கும் நன்றி பெரிதும் பாராட்டி என் மனதார வந்தனஞ் செலுத்துகின்றேன்.

வயலூர்க் குமாரக்கடவுளின் சந்நிதியிலேயே இந்நூலை அரங்கேற்றக் களிப்போடிடங்கொடுத்துச் சன்மானித்த பெருந்தகையாளர்களாகிய கோவில் மானேஜர்கள், சோமரசம்பேட்டை, ஸ்ரீமான், அழகப்ப முதலியார் அவர்களின் குமாரர், ஸ்ரீமான், வேதமூர்த்தி முதலியார் அவர்களுக்கும், திரிசிரபுரம், தோட்டா, ஸ்ரீமான், ராதா கிருஷ்ணஞ்செட்டியார் அவர்களுக்கும், நான், நன்றிகாட்டி, அவர்களைப் பெரிதும் வாழ்த்துகின்றேன்.

இதனை, அழகாகக் குறித்த காலத்துள் விரைவில் அச்சிட்டுத் தந்தசதரன் ஸ்டார் அச்சுக்கூடத் தலைவர்களுக்கும் என் வந்தனத்தைச்செலுத்துகின்றேன்.

இதனை, அபிமானித்துப்படித்து இன்னும் என்னை இத்தகைய காரியங்களிற் செலுத்தும் பெருந்தகையாளர்களையும் வாழ்த்தி வணங்கக் கடமைப்பட்டுள்ளேன்.

---

* 91-வது பாடலிற் குறிக்கப்பெற்றவர்கள், இவரும், இவர் குழந்தையுமாம்.

## அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

கல்களிலே மாணிக்க முயர்வதனிற் கோகினூர் கணிக்கின் மேலாம்
சொல்களியே தருசிந்தா மணியதனி னுயர்ந்தவதிற் றூய தாய
மல்களியார் கௌத்துவமே சிறந்தவவற் றிற்கெல்லாம் மாலா கித்தே
புல்களிசேர் தேவாஞ்சப் பிரமணியே சிறந்தமணி புகலி னம்மா. 1.

எம்மணிகண் குளிரவளங் காட்டுவய லூர்முருக னெனுநற றேவாம
எம்மணிக்குஞ் சிறந்தமணி யெனுமுயாசுப் பிரமணியை யிறைஞ்சி யேத்தி
வெம்மணியி லென்மொழியாங் கிழியினிடை வைத்தேனுன் விரும்பு மனபால்
இம்மணியின் சீரறிந்தா ரம்மணிகண் டென்மொழியை யிகழ்வ துண்டோ. 2.

சுபம்! சுபம்!! சுபம்!!!

திரிசிரபுரம்,
4—12—18.

அ. சுந்தரநாதன்.

சிவமயம்.

# சோதக பத்திரம்.

| பக்கம் | பாட்டு | அடி. | பிழை | திருத்தம. |
|---|---|---|---|---|
| III. | சாத்துக் கவி. | 3 | சூட்டினளெ. | சூட்டினனளெ |
| | | | நூல். | |
| 4 | 11 | 3 | ஆய்நது | ஆய்ந்து |
| ,, | 12 | 2 | தெளளு | தெள்ளு |
| 14 | 55 | 4 | கால், | கால். |
| 24 | 98 | 1 | புகுநன் | *புகுந்தன் |

உ

சிவமயம்.

சிவசண்முகன் றுணை.

# ஆதிவயலூர் வெண்பா அந்தாதி.

## சாத்துக்கவிகள்.

பிரமஸ்ரீ, சாது, சதாசிவப் பிரமம் என்னும் பெரியார்

திருவாய் மலர்ந்தருளிய சாத்துக்கவி.

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

ஏறுயர்த்த கொடிப்பரமன் சிறைப்பிரமன் றுயரகற்ற வினிதா வந்து
வீறுயர்த்த மறைமுதலி னெண்பொருளை விளம்புகென மிக்க காதல்
தேறுயர்த்த வறுமுகனை யைம்முகனார் கேட்டிடலுந் தெரிய வந்நா
ளாறுயர்த்த தேசிகனாத் திருவோ கதிலுரை யளித்தா னன்றே. 1

அப்பனுக்கே குருவான தப்பகற்றக் குகன்முறையே யடைந்து [தானவ்
வப்பனுக்கே பூசைபுரிந் தப்பனுய ராசியுற்ற வாதி யூராம்
*வெப்பழுக்கச் சோலைசெறி வயலூரில் வாழ்குகனும் வேலோ னுள்ள
†மொப்பனுக்காத தமிழ்வெண்பா வந்தாதி பிறந்திட்ட துலகினம்மா

இந்தத்தமிழ வெண்பாவந் தாதிதனைப் பிறப்பித்தோ னெவனே [யென்னில்
கந்தனவன் தந்தைதா யிவர்தாளி லன்பருக் கருத்து மிக்கான்
முந்தவணி தமிழ்முறையே கற்றறிந்து கவிசொல்லு முதன்மை யாள
னந்தமிழ னமிர்தகவி புத்திரன்சுந் தரநாத னறிஞ ரேறே. 3

(*அணுக்கா = அணுகாத. †அணுககா = வருத்தாத.)

ஸ்ரீரங்கம், ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதரும்; வித்தவானுமாகிய
பிர்மஸ்ரீ, குரு. சுப்பிரமணிய ஐயர் அவர்கள்
சாற்றிய சாத்துக்கவி.

உற்றவியற் செந்தமிழி னேரகுவெண்பா வந்தாதி
கொற்றவய லூரகுமரன் கூர்ங்கழற்கே—விற்பனமா
நாவணடைச் சுந்தர நாதனிங்கு நாட்டினான்
பாவன்மை யானேகசப பார்த்து.

---

திரிசிரபுரம், செண்டு ஜோசப் கலாசாலைத் தலைமைத்தமிழ்ப்
பண்டிதரும், யுனிவர் சிட்டி பரீட்சையில் வித்துவான்
பட்டப் பெற்றவருமான பிர்மஸ்ரீ. A. M. சடகோப
ராமநுசாச்சாரியார் அவர்கள் சாற்றிய சாத்துக்கவி.

ஆதிமகன் கந்தன் அணிவயலூர் மேவுபெருஞ்
சோதிகுகன் தோட்கிளையைச் சொல்லிசையந்—தாதிதனை
வெண்பாவாப் பாடி வியன்சுந் தரநாதன்
பண்பாவா லோங்கினனப் பா.

---

திரிசிரபுரம், எஸ். பி. ஜி. கழகத்துத் தமிழ்ப்புலவர்
ஸ்ரீமான் மு. நடேச முதலியாரவர்கள்
சாற்றிய சாத்துக்கவி.

கொண்டலுறை தண்டலைசூழ் கோதோட்டு நல்வயலூர்ப்
பண்டை முருகன் பணைப்புயத்தே—ஒண்டமிழாற்
சுந்தர நாதன்றான் சூட்டினனந் தாதியெனு
முந்துறுநன் மாலை முதிர்ந்து.

திரிசிரபுரம், எஸ். பி. ஜி. கழகத்துத் திராவிட பாஷா பண்டிதர், பிர்மஸ்ரீ V. S. வெங்கட்டராவ் அவர்கள் சாற்றிய சாத்துக்கவி.

நண்பாரோண் சுந்தர நாதப்பேர் நாவலனோர்
வெண்பாவந் தாதிநூல் விதகத்தால்—எண்பாரும்
ஆதிவய லூர்முருகனை ஆசைகொளச் சூட்டினார்
தோதினுறும் வாழ்வுசுகத தோடு.

---

சோழமாதேவி, வித்துவான் ஸ்ரீமான். அ. குப்புசாமிபிள்ளை அவர்கள் சாற்றிய சாத்துக்கவி.

ஆசிரியச்சந்த விருத்தம்.

விண்புகு தருநிறை தண்பொழில் கழனியும் விரும்புநல் வளந் [தரலால்
விழைதகு மடமனை மகவுற வினரொடு வியக்குறும் வாழ்வினராய்க்
கண்புகு நுதலர னன்பின ரொடுவரு கவினுரு மேனையரும்
கனிந்துள மகிழ்வுற விழைவன வுதவுறு கனமிகு நல்லோர்சேர்
மண்புக ழணிவய லூர்தனி லினிதமர் வடிக்கதிர் வேற்குமரன்
வனசமென் மலரடி தனில்வர முறுநகவி மாலையைச் சூட்டினனாற்
றிண்புகு நலமணி மாளிகை நிரையொளிர் சிரபுர நகர்வாழவோன்
சீவளர் சுந்தர நாதனெ னும்பெயர் தீந்தமிழ் நாவலனே.

---

உ

மதுரைச் சிவஞான சபைக்காரிய தரிசியாராகிய,

ஸ்ரீமான். ம. அழகர்சாமிபிள்ளை அவர்கள்

சாற்றிய சாத்துக்கவி.

நேயமிகு நீபத்தோன் வாழ்வருளல் நிட்சயமே
தூயவய லூர்க்கந்தன் தோட்களிலே—தோயவென
நாவலனற் சுந்தர நாதன்றான சூட்டிய
பாவலரந் தாதிபடிப் பார்க்கு.

---

திரிசிரபுரம், முனிசிபாலிட்டி வீட்டுவரி பில்கலெக்டரும்;
இந்நூலாசிரியர் மைத்துனருமாகிய, காட்டுப்புத்தூர்
ஸ்ரீமான் அ. ம. நாராயணசாமி பிள்ளை அவர்கள்

சாற்றிய சாத்துக்கவி.

கட்டளைக் கலித்துறை,

பங்கை மலைமகட் கீந்த பரனருட் பாலனெ னுஞ்
செங்கை திகழயிற் கந்தன் வயலூரன் சிந்தைகொளச்
சங்கை யறவுயர் வெண்பாவா லந்தாதி சாற்றினனென்
றங்கை தொழுநனுஞ் சுந்தர நாதத் தமிழ்வலனே.

---

தேவிகோட்டை, ஸ்ரீமான் ஏகப்பசெட்டியார் அவர்களின் குமாரரும்; மகா-ா-ா-ஸ்ரீ நாவலர் மு. நடேச முதலியாரவர்களின் மாணாக்கருமாகிய ஸ்ரீமான் யே. பேரி. சு. யே. பேரிய கருப்பன் செட்டியார் அவர்கள்

சாற்றிய சாத்துக்கவி.

சுந்தர நாதனுஞ் சொற்றகை யன்பினொடே
தந்தி முகவனார் தனபினனும்—நந்தம
வயலூர்வாழ கந்தனுக்கு வண்வெண்பா வாலோர்
நயமாரந் தாதிசொற்ருன் நன்கு.

---

திருச்சிராப்பள்ளி தாலூக்கா, வடகாப்புத்தூர், பிரமஸ்ரீ கோபால ஐயர் அவர்களின் குமாரரும்; திரிசிரபுரம் எஸ். பி. ஜி. கழகத்து மாணவரும்; சோமரசம்பேட்டை, சரஸ்வதி விலாசத் தமிழ்ச்சங்கத்துக் காரியதரிசியும்; இந்நூலாசிரியரின் மாணாக்கருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ G. வைத்திநாத ஐயர் அவர்கள் சாற்றிய சாத்துக்கவி.

சீராருங் கடலுடுத்த நிலமகளின் திருமுகத்துத் திலக மென்னப்
பாராரும் புகழ்பெற்ற வயலூர்வாழ் வேன்முருகன் பருத்த தோண்மேல்
தாராருந் தமிழ்வளத்தா னெனதாசான் சுந்தரநா தப்பேர் கொண்டோன்
ஏராரும் வெண்பாவந் தாதியெனு மலங்கலணிந் திசைகொண் டானே.

---

நாமக்கல் தாலூகா: திண்டமங்கலம், மிராசுதார் ஸ்ரீமான் நஞ்சையப்பபிள்ளை அவர்களின் குமாரரும்; திரிசிரபுரம், எஸ். பி ஜி கழகத்து மாணவரும்; இந்நூலாசிரியரின் மாணாக்கருமாகிய மகா-ள-ள-ஸ்ரீ **சின்னசாமி பிள்ளை அவர்கள்**

**சாற்றிய சாத்துக்கவி.**

சீர்பெருகும் நல்வயலூர்ச் செவ்வேளின் றுணையந்தே
பார்புகழும் பைந்தமிழாற் பாடினான் — பேர்திகழென்
சுந்தர நாதப்பேர் சொற்குரவன் பன்னுவெண்பா
முந்துறுமந் தாதிதனை முன்.

---

திரிசிரபுரம், உறையூர், பிரமஸ்ரீ C. நாராயணசாமி ஐயர் அவர்களின் குமாரரும்; திருச்சி, S. P. G. கலாசாலை மாணவரும், இந்நூலாசிரியரின் மாணாக்கருமாகிய மகா-ள-ள-ஸ்ரீ **சானகிராம ஐயர் அவர்கள்**

**சாற்றிய சாத்துக்கவி.**

மங்கையிடம் வைத்தவரன் மாபாலன் கந்தனெனும்
துங்கவய லூர்முருகன் றேண்மருவ — எங்கடமிழ்
நல்லாசான் சுந்தர நாதனென்பான் சூட்டினான்
சொல்லாரந் தாதியொன்றைச் சூழ்ந்து.



சிவமயம்.

வேலுமயிலுந் துணை.

# ஆதிவயலூர் வெண்பா அந்தாதி.

## காப்பு—வெண்பா.

திங்க ளணிசடையார் [1]சேயாந் திருவயலூர்
[2]துங்க முருகன் [3]றுணைத்தாட்கே—இங்கிதமாச்
செந்தமிழ்வெண் பாவாற் [4]றிகழுமந் தாதிசொலக்
கந்தனொடு யானைமுகன் காப்பு.

## தந்தையார்—துதி.

### வெண்பா.

கந்தன் வயலூரான் கான்மலர்க்குக் காதலொடு
செந்தமிழின் வெண்பாவாற் [5]சீரியதா—முந்துறுமந்
தாதிசொலத் தந்தை தமிழமிர்த நாவலன்றாள்
[6]ஓதிமனம் போற்று முவந்து.

---

1. சேய் = பிள்ளை; 2. துங்கம் = பரிசுத்தம்; பெருமை. 3. துணை = இரட்டை. 4. திகழும் = விளங்கும். 5. சீரியதா = சிறப்பாக. 6. ஓதி = துதித்து.

# நூல்.

வெண்பா.

பூமாதி னின்முகமென் பொற்பார் வயலூரில்
நாமா திசைக்கவளர் நற்றேவே!—*மாமாநின்
நன்மருகா! இன்முருகா! நாயேன் மனத்தகத்
தின்மறுகா[1] தின்பத் திரு. (1)

இன்பத் திருவயலூர் என்னுதிருக் கோயிலின்கண்
மன்பத் தருக்கென்றே வாய்ந்தமரும்—முன்[2]பித்தர்
ஈன்ற முருகா! எளியேன் றுயரகற்ற
[3]ஆன்றவுனக் கேனோகா தா? (2)

ஆன வயலூரில் ஆர்ந்தமரும் ஆறுமுகா!
[4]தீனனெனைக் காத்தருளுந் [5]தேசிகனே!—கானவொரு
நற்குறத்தி காதலனே! நான்களிக்க மாமயின்மேல்
உற்றெனக்கு முன்வா உவந்து. (3)

உவந்து நினதடியே உண்ணயந்து போற்றுந்
தவந்தனையே கொண்டேன் தமியேன்—அவந்துடைத்தே
ஆதிவய லூரா! [6]அயில்பிடித்த செங்கரனே!
நீதியொடு காக்க நினை. (4)

---

1. மறுகாது=சுழலாது; மனங்குழம்பாது. 2 பித்தர்=சிவபெருமான். 3. ஆன்ற=சிறந்த. 4. தீனன்=ஏழை. 5 தேசிகன்=குரு. 6 அயில்=வேல். * மாமாதின்=லட்சுமி தேவியின்.

நினையன்றி யாரை நினைப்பே னடியேன்?
[1]புனையன்றில் போல்வள்ளி போகந்—தனைவிரும்பி
ஆண்ட வயலூரா! ஆறுமுகா! நின்கழலே
வேண்ட வருவேன் [2]விழைந்து. (5)

விழைந்துபவ மேபுரியும் வீணனென வென்னைத்
தழைந்து வருபிறப்பிற் றள்ளேல்—குழைந்துனைப்
பாடு மடியேற்குப் பாரவய லூரமுருகா!
நாடுமகிழ் ஈவாய் நயந்து. (6)

[3]நயந்துவய லூர்மேவும் நாயகனே! கந்தா!
பயந்துகம னுக்காப் [4]படிமேல்—[5]சயந்தருநின்
வேலுமயி லுந்துதித்தேன் வேண்டு மெனக்கருளிக்
கோலு சுகமனைத்துங் கூட்டு. (7)

கூட்டுபெரு மன்பாற் குணங்கெட்ட நாயேனும்
நீட்டுவய லூர்க்கந்தா! நின்மலர்சேர்—தாட்டுணைக்கே
பாட்டிசைத்து நின்றேன் [6]படரவரு மென்றுயரை
ஓட்டியருள் செய்வாய் உணர்ந்து. (8)

உணர்ந்து வழிநில்லேன் ஒங்கறமுஞ் செய்யேன்
கொணர்ந்து பலமலரைக் கொண்டு—புணர்ந்தபவ

---

1. புனையன்றில் = அலங்காரமான அன்றிற்பட்சி. 2. விழைந்து = விரும்பி. 3 நயந்து = விரும்பி. 4. படி = பூமி. 5. சயம = வெற்றி. 6. படர = துன்பப்பட; மிகுதியாக.

கலங்கா மனம்பு மூலைவிழி யாமங் கையர்மயலைக்
கலங்கா மனம்புயன் போற்றிடு மேரகன் கால்கடொழு
கலஙகா மனம்புன் னெறியடை யாம் லெனக்கருதோங்
கலங்கா மனம்புகி லேமென் றியாங்கதி கண்டிடலே.

(இ - ள்) மனம் - மனமானது,—புல் நெறி அடையாமல் - கீழ்மார்க்கத்தை அடையாமல்,—அம் கா மன் அம்புயன் போற்றிடும் ஏரகன் கால்கள் தொழுகலம - அழகிய கற்பகச் சோலைக் கரசனாகிய இந்திரனும், தாமரையாசனனாகிய பிரம தேவனுந் துதிக்கின்ற திருவேரகமலையி லெழுந்தருளியிருக்கின்ற சுவாமிநாதக் கடவுளினது திருவடிகளை வணங்கினோமில்லை;—கல் காமன் அம்பு மூலை விழியாம் மங்கையர் மயலைக கல் எனக் கருதோம் - மலையையும் மன்மதனுடைய பாணமாகிய நீலோற்பலமலரையும் போன்ற மூலைகளையுங் கண்களையுமுடைய பெண்களின்மேல் வைக்கபபட்ட மயக்கத்தைக் களைந்துவிடு என்று நினைக்கமாட்டோம்;-கலஙகாமல் நம்புகிலோம்- கலக்கமடையாமல் (நாம்) நம்பினோமில்லை.—யாம் கதி கண்டிடல் என்று - (இங்ஙனமாயின்,) நாம் மோக்ஷத்தை அடைதல் எந்நாள்? எ - று. (கூரு)

முதலடியிலுள்ள அம் சாரியை.

கண்ட காத்த மலர்நோக் கசுரக் கயவரெனுங்
கண்ட காத்த பனன்முன் னிருளெனக் காசினியின்
கண்ட காத்திரு வேர காமுரு காகடம்பார்
கண்ட காத்தயில் வைத்தோ யருள்வினைக் கட்டறவே

(இ - ள்.) கண் தகு அரத்த மலர் நோக்கு அசுரக் கயவர் எனுங் கண்டகர் - கண்கள் தகுதிபொருந்திய செவ்வரத்தமலா போலச் சிவந்து பார்க்கின்ற அசுரர்களாகிய. கீழ்மக்கள் என்று

சொல்லபபட்ட பாதகர்களே,—அத் தபனன் முன் இருள் எனக் காசினியின் கண் தகர் திரு ஏரகா-அச்சூரியன்முன்னே கண்ட இருள்போலப பூமியின்கண்ணே அழித்தருளிய திரு வேரக நாதனே!—முருகா - இளமைபபருவத்தை யுடையவ னே!—கடம்பு ஆர் கண்ட - கடபபமாலைபொருந்திய திருக கண்டத்தையுடையவனே!—கரத்து அயில வைததோய் - திரு க்கரததில வேலாயுதத்தை வைத்தருள்கின்றவனே!—வினைக கட்டு அற அருள் - அடியேனைப பந்தித்திருககின்ற இருவினை க்கட்டு நீஙக கிருபை செய்தருளுக எ - று (கூச)

மூனறுமடியிலுளள அசரம் சாரியை

கட்டா மரைநொடிப போதுநில லாதுசெல் காதலையிக்
கட்டா மரைபபடுங காலன்கை யிபபெருங் காயம்பற்றிக
கட்டா மரையென வாணுளை வீணிற் கழிததுககலலோங்
கட்டா மரைநல்ல வயலே ரகன்புகழ்க கல்வியையே

(இ - ள்) கைபபற்றிக் கட்டு ஆ மரை என - கையினுற் பிடித்துக கட்டுகினற பசுவையும் மானையும்போல,—கட்டு அரை நொடிபபோதும் நில்லாது செல் காது அலை - சடைப பட்டு அரைநொடிபபோதும் நில்லாமலும் போகாமலும் அலை கின்றதும,—காலன் இக்கட்டு அரைபபடும் இப பெருஙகாயம்- இயமனால் துன்பத்திற்கிடந்து அரைபடுகின்றதுமாகிய, இப பெரியசரீரததினது,—வாழ்நாளை வீணில் கழித்து - வாழ்நாளை வீணாகக் கழித்து,—கள் தாமரை நல்ல வயல் ஏரகன் - தேன்பொருந்திய தாமரைமலர்களையுடைய நல்ல வயல்களாற் சூழபபட்ட திருவேரகமலையில் எழுந்தருளியிருககின்ற சுவாமி நாதககடவுளினது,—புகழ் கல்வியைக் கல்லோம் - கீர்த்தியைச் சொல்லுகின்ற கல்வியைக் கற்றேமில்லை, எ - று. (கூரு)

ஆம் இரண்டும் சாரியை.

கல்லார வாவி திகழே ரகன்மணிக் காறொழுது
கல்லார வாவினை வீடெய்த வேகதி காட்டுமெய்ந்நூல்
கல்லார வாவி நிலையல வென்று கருதினெஞ்சாங்
கல்லார வாவி மலாவென் றுரைத்திலர் கண்கசிந்தே.

(இ - ள்.) கல் ஆர் அவா வினை வீடு எய்த கதி காட்டும மெய்ந்நூல் கல்லாா - மலைபோலப பொருந்திய ஆசைகளும வினைகளும் அழிவு அடைய மோக்ஷத்தைக் கொடுக்கினற மெய்ந்நூலைக் கல்லாதவர்கள்,—ஆவி நிலை அல என்று கருதி - உயிரானது நிலையுடையன அல்ல என்று நினைத்து,—கல்லார வாவி திகழ் ஏரகன் மணிக்கால் தொழுது - நீலோற் பலமலர்களையுடைய தடாகங்கள் விளங்குகின்ற திருவேரகமலை யிலெழுந்தருளியிருக்கின்ற சுவாமிநாதக்கடவுளுடைய அழகிய திருவடிகளை வணங்கி,—விமலா நெஞ்சு ஆம் கல் ஆர வா என்று கண் கசிந்து உரைத்திலர் - மலமுத்தரே மனமாகிய கல் லினிடத்தே பொருந்த வந்தருளுக என்று கண்கள்கசிந்து(ஆன நதபாஷ்பஞ் சொரிய) பிரார்த்தித்திலர் எ - று. (கூகூ)

இரண்டாமடியிலுள்ள ஏகாரம் தேறறம், மூனறாமடியிலுளள அகரம் சாரியை.

சிந்து வணக்கணன் சேய்கணை பாயத் தியங்கிக்கண்ணீர்
சிந்து வணக்க னுதல்விழி போற்றுயர் செய்யமதி
சிந்து வணக்கவி பாடாளென் றேகண்டு சென்றுளங்க
சிந்து வணக்கத் துடனே ரகற்குரை செய்மின்களே.

(இ - ள்.) சிந்து வணக் கணன் சேய் கணை பாயத் தியங கிக் கண்ணீர் சிந்துவள் - (உனது தலைவியானவள்) கடல்போ ன்ற நிறத்தையுடைய விஷ்ணுமூர்த்தியின் புத்திரனாகிய மன்ம

தனுடைய பாணங்கள் தைக்க மயங்கிக் கண்ணீர்விடுகின்ற னள்;—மதி நக்கன் நுதல் விழி போல் துயர் செய்ய - சந்திர னனவன் சிவபெருமானது நெற்றிக் கண்போல் துன்பத்தைச் செய்ய,—சிந்து வணக் கவி உளம் கசிந்து பாடாள் என்று - நொண்டிச்சிந்தையும் வண்ணப்பாட்டையும் மனங்கசிந்து பாட மாட்டாள் என்று,—ஏரகற்குச் சென்று கண்டு வணக்கத்து டன் உரைசெயுமின்கள் - (தோழிகளே) திருவேரகமலைக ளுள்ள எனது தலைவனைபபோய்ப் பார்த்து (என்விஷயத்தை) வணக்கத்தோடு சொல்லுங்கள் எ - று. [தலைவி தோழிக்குக் கூறல்.] (கஎ)

வண்ணம கணணன என்பன வணம கணன என வநதவை இடை க்குறை. மூன்றுமடியிலுள்ள ஏகாரம் தேற்றம்.

களங்கண் டனமலை வேல்வளை யாஙகுழல் கார்வசனங
களங்கண் டனமட வார்மால் படிந்து கலநதவருட்
களங்கண் டனமினி நெஞ்சேசும் மாவொழி யாக்கருவாங்
களங்கண் டனந்திரு வேரகஞ் சேர்நதுய்வை கைதொழுதே

(இ - ள்.) நெஞ்சே - மனமே!—களம் வளை கண் வேல் தனம் மலை குழல் கார் வசனங்கள் அம் கண்டு அன - கழுத்துச சங்கும், கண்கள் வேலும், முலைகள் மலையும், கூந்தல்மேகமும், சொற்கள் அழகிய கற்கண்டும் போன்ற,—மடவார் மால் படி ந்து - பெண்களது ஆசையிலழுந்தி,—கலந்து அவர் உள் களம் கண்டனம் - (அப்பெண்களோடு) சேர்ந்து அவர்கள் மனவஞ்ச கத்தை யறிந்தோம்;—இனிச் சும்மா ஒழியாக் கருவாம் களம் கண்டனம் - இனி வீணுகக்கழிகின்ற பிறப்பாகிய இடத்தைக்

கண்டோம்.(ஆதலின்),—திருவேரகம் சேர்ந்து கைதொழுது உய்வை - திருவேரகமலையையடைந்து கைகுவித்து வணங்கி உய்வாயாக எ - று. (கஅ)

கள்ளம் என்பது களம் என வந்தது இடைக்குறை

கைத்த வருக்க முனையம்பு சாயக் களத்திடைபப
கைத்த வருக்க வசுரருஞ் சூருங் கலங்குறத்து
கைத்த வருக்க னிகர்வேல வேரக காதறனைக்
கைத்த வருக்கன்ப னாவதென் றாறிரு கட்பரனே

(இ - ள்.) கை தவர் உக்க முனை அம்பு சாயக களத்திடைப பகைத்த - கையினிடத்துள்ள வில்லழியவும், கூர்மை பொருந்திய அம்பு முறியவும் யுத்தகளத்திடைப பகைத்த,— வருக்க அசுரரும் சூரும் கலஙகுறத துகைத்த அருககன் நிகர வேல - கூட்டமாகிய அசுரர்களுஞ் சூரபத்மனும் கலங்குமபடி வருத்திய சூரியனையொத்த வேலாயுதத்தையுடையவனே!— ஏரக - திருவேரகமலையிலெழுந்தருளி யிருககின்றவனே!— ஆறிரு கண் பரனே - பன்னிரண்டு திருக்கண்களையுடைய மேலானவனே!—காதல் தனைக் கைத்தவருக்கு - ஆசையை யொழித்தவருக்கு,—அன்பன் ஆவது என்று - அன்புடையவனாய்க் கிருபை செய்வது எந்நாள்? எ - று. (கக)

பரங்கிரி யார்திரு வேரக வேலர் பரவுறும்
பரங்கிரி யாமற் கொடுஞ்சூரை வென்ற பரமசொரூ
பரங்கிரி யார்மண் ணளந்தான் மருகர்நம் பால்வந்திருப
பரங்கிரி யாமுதற் சித்தியு மீவர்பைம் பூதலத்தே.

(இ - ள்.) பரங்கிரியார் - திருப்பரங்குன்றத்தி லெழுந்தருளியிருக்கின்றவரும்,—திருவேரக வேலர் - திருவேரகமலையி

லெழுந்தருளியிருக்கின்ற வேலாயுதத்தை யுடையவரும்,— பரவு உறும் உம்பர் இரியாமல் அங்கு கொடும் சூரை வென்ற பரம சொரூபர் - துதிக்கின்ற தேவர்கள் தோற்றோடாமல் அப பொழுதே கொடுமை பொருந்திய சூரபத்மனைச் செயித்த மேலான திருவுருவத்தையுடையவரும்,—அம் கிரியார் - அழ கிய மலைகடோறும் வசிக்கின்றவரும்,—மண் அளந்தான் மரு கர் - உலகங்களையளந்த விஷ்ணுமூர்த்தியின் மருகருமாகிய சுவாமிநாதக்கடவுள்,—நம் பால் வந்து இருப்பர் - நம்மிடத்தே வந்து எழுந்தருளியிருபபர்;—பைம் பூதலத்தே அம் கிரியாம் முதல் சித்தியும் ஈவர் - பசிய பூமியினிடத்தே அணிமா கரிமா முதலிய சித்திகளையுங் கொடுத்தருளுவர். எ - று. (௧00)

திருவேரகத்தந்தாதியுரை

முற்றுப்பெற்றது.

---

## மங்கலவாழ்த்து.

பார்வாழி யேரக வேலவன் வாழி பகர்கடப்பந்
தார்வாழி சேவற் கொடிவாழி வேண்மயின் வாழிதக்கோர்
சீர்வாழி யந்தணர் வேதங்கள் வாழி செழுங்குடியி
னோர்வாழி சைவ நெறியோர்கள் வாழி யிசைபெறவே.

(இ - ள்.) பார் வாழி - உலகங்கள் வாழக்கடவன,—ஏரக வேலவன் வாழி - திருவேரகமலையிலெழுந்தருளி யிருக்கின்ற வேலாயுதக்கடவுள் வாழக்கடவர்,—பகர் கடப்பம் தார் வாழி - சொல்லப்பட்ட அக்கடவுள் அணிந்திருக்கின்ற கடப்பம்பூ மாலை வாழக்கடவது,—சேவல் கொடி வாழி - அவருடைய

கோழிக் கொடி வாழக்கடவது,—வேல் வாழி - அவருடைய ஆயுதமாகிய வேல் வாழக்கடவது,—மயில் வாழி - அவர் வாகனமாகிய மயில் வாழக்கடவது;—தக்கோர் சீர் வாழி - தகுதி பொருந்திய பெரியோர்களது கீர்த்திகள் வாழக்கடவன,—அந்தணர் வாழி - பிராமணர்கள் வாழக்கடவர்கள்,—வேதங்கள் வாழி - வேதங்கள் வாழக்கடவன,—செழும் குடியின் ஏர் வாழி - செழுமைபொருந்திய வேளாண்குடியினர்களது பயிர்த்தொழில் வாழக்கடவது;—சைவநெறியோர்கள் இசை பெற வாழி - சிவமார்க்கத்தை யநுஷ்டிக்கின்ற சைவர்கள் புகழுண்டாக வாழக்கடவர்கள். எ - று.

* ஏர் என்றது ஏரினுலுண்டாகும் பயிர்த்தொழிலுக்கானது ஆகு பெயர்.

---

உ

திதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவபெருமான்றனித்திருவந்தாதி.

---

விஷ்ணம்பேட்டை அய்யாசாஸ்திரியள் புத்திரரும்,
மஞ்சக்குப்பம் இஞ்சினீர்பீசு சூபிரண்டாண்டுமாகிய
அ. வி. கிருஷ்ணசாமி அய்யராலியற்றப்பட்டது.

இது,

பறங்கிப்பேட்டை திருவருண்ஞானப்பிரகாச,
திருச்சிற்றம்பல முடையாரடிமை,

ம-௱-௱-ஸ்ரீ அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்களாலும்,
கும்பகோணம் பொற்றாமரை ஸ்கூல்மாஜிபிரதம உபாத்தியாயருமாய்,

இப்போது கும்பகோணம் தாலூகா பரிசோதனை
உபாத்தியாயருமான,

ம-௱-௱-ஸ்ரீ ஐ. சாமிநாத முதலியாரவர்களாலும்
பார்வையிடப்பட்டு

கூடலூர் "தேசாபிமானி" அக்ஷரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

விஜயவருஷம் ஆவணிமீ,

இதன் விலை அணா 1-3.

உ

சிவமயம்

சாத்துக்கவிகள்.

இந்த பறங்கிப்பேட்டையிலிருக்கும் திருவருள்ஞானப்பிரகாச
திருச்சிற்றம்பல முடையாரடிமை மகா-ா-ஸ்ரீ அ. முத்து
த்தாண்டவராய பிள்ளையவர்களாலியற்றப்பட்ட

நேரிசைவெண்பா.

சங்கத் துறைமேய சவகத்துறையாடன்
சங்கத துறைமாலை சாற்றினால்—சங்கத்
துறையான கிருட்டிணமாற் றாயன் றுரியுந்
துறைபடான கிருட்டிணமாற் றென்று

வைதூர் வித்துவான் மகா-ா-ஸ்ரீ.
ஸ்ரீ நாராயணசாமி பிள்ளையவர்களியற்றிய

கட்டளைக்கலித்துறை

அருட்டினகத்தேனகங்கொண்ட ஞானவமைகியொடு
விருட்டின நீத்துச்சிவ பெருமானனி யேயாறுகொளத
தெருட்டின னந்தாதி யென்றா முகருட்டேன்மலியக்
கிருட்டினசாமி மெய்க்கேண்மையுறைபுகலளித்தவனே.

ஷை யூ: மகா-ா-ஸ்ரீ சி. விநாயகம்பிள்ளை அவர்களியற்றிய
எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

[illegible]ாண்ட வன்பருளச் செறிவதாகித் திகழ்கின்ற வெவ்வுயிர்க்குந்
[illegible]லைநல்கும்
[illegible]ட சம்புவெனும் பெருமான் றேட்டுப்பேசு புகழ்
[illegible]பாவந்தாதியெனனூர்

தார்கொண்ட பாமாலை யன்பின் வேய்ந்தான்றகு விஷ்ணம்பேட்
டை வளரய்யாவய்யர்க்

சேர்கொண்ட பிரமகுலத்தழைக்கவந்த வெழிற் கிருஷ்ணசாமி
யெனு மிசைவல்லோனே.

நேரிசை வெண்பா.

கிருட்டினசா மிப்பெயரோன் கீர்த்திப்பா மாலைக்
கிருட்டினசார் வில்லா திசைததாள — மருட்டினமாற்
காட்டாக் கடவுட் கருணையாற கொண்டபுகழ்க
கேட்டாக் கடவுட் ளா.

இஃது

யாழ்ப்பாணம், காரைநகர் இரகண விளக்க நூலா
சிரியரும் சைவப்பிரசாரகருமாகிய மகா-ா-ஸ்ரீ
ஐ. வியாகிரபாதபிள்ளையவர்களியற்றியது.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சீருருஞ் சென்னியர் கோன்றேயமே யத்திகழ் விஷ்ணம்பேட்டை
யையாவையர் சேயோன்

காருரு மிந்திரநற்பதமே கொள்வோன் கருதுமாரியர்களுக்கோர்
கணேணயானென

பாருருஞ் சிவகாமநூற் பரவை மூழ்கிப்பண்ணூர்ந்த நால்வேதம்
பயிற்று நாவான்

ஏருறுங் கிருட்டின மாலிளவற் கோமானெம் பெருமானந்நிதிப்
பதிகமீந்தான.

நெஞ்சொடு கிளத்தல்

ஓட்டினு னின்றுன்ப மொன்றிற்கும் நீயஞ்சேல்
வாட்டினு னின்பாச வாரிதியை — நாட்டிப்
பவபெருமா னேற்றுப் பாடிப் பணிவாய்
சிவபெருமான் போற்றுநற் சீர்.

திருச்சிற்றம்பலம்.

# சிவபெருமான்றனித்திருவந்தாதி

## விநாயகர் வணக்கம்.

1. நித்தனெனு நின்மலன்மே னேயத்தா னீமநமே
சுத்தவெண் பாமாலை சூட்டுதற்கு — நித்தமுமே
நாலு முகத்தோனு நாரணனுந் தாம் வணங்கும்
நாலுமுகத் தோன்பாதம் நாடு.

2. வெல்விடைமேற் றோன்றும் விமலன்மே னீமநமே
நல்கிடுவெண் பாமாலை நாட்டுதற்கு — நல்கிடுமே
யஞ்சக் கரத்தானு மந்தணனுந் தாம்போற்றும்
பஞ்சக் கரத்தான் பதம்.

## நூல்

1. சீர்கொண்ட வெம்பெருமான் றேவிமலர்க் கண்களிக்கப்
பேர்கொண்ட சிற்சபையிற் பேரின்பங் — கார்கொண்ட
கண்ணன்முதற் றேவரெலாங் காண நடம்புரியுங்
கண்ணுதலற் கண்டன் கழல்.

2. சழற்பணி யாதோர் கடுநரகிற் சேர்வார்
கழற்பணி யாதோர் கருது — கழற்பணியா *
ரஞ்சக் கரத்தா னமைத்தா ரழலேற்று
னஞ்சக் கரத்தா னறிந்து.

3. அறியாயோ வார்தவத்தோ ரஞ்ஞானத் தாலே
யறியாயோ வார்தவத்தோரணி — யறியாயோ
மாதங்கம் போர்த்தான் மதியாம லேவியெறி
மாதங்கம் போர்த்தான் மகிழ்ந்து.

---

* தாருகாவனவிருடிகள்.

4. மாதங்கம் பெற்றான் மகவங்கங் காய்ந்தானே
மாதங்கம் பெற்றான் மகிழ்ந்தேநீ — மாதங்கங்
கொண்டான் கரதியுங் கொண்டான் றுடியுங்கைக்
கொண்டான கொளுவாய்க் குறித்து.

5. குறையேது மில்லைபிசாசி கூற்றுவனுங் கூடா
னிறை யாருக் கில்லைய மரேகன — மறையேதுந்
தேடரிய தெய்வமே தென்மதுரை மன்றினிலே
யாடரிய வாட்டா னறி.

6. அர்தொலைப்பா ரென்றெண்ணி யஞ்சாதே நின்பிறப்பை
நீர்கொண்ட வேணியனே நீக்குவான் — பாரிற
பிறந்திறக்குந் தெய்வப் பெரியோரைப் பேறாய்
மறந்திறக்கும் மாலைபே மற.

7. மாண்டு பிறந்துழலு மாநோயை மாய்த்தற்கு
வேண்டு மருந்தானகு வேண்டினால் — வேண்டி
நரிக்குப் பொதிசோறு நாளுநீ கட்டும்
நரிக்குப் பரிகொடுத்தான் றாடு.

8. தானே யுலகுடையோன் றன்னூட்டம் பல்லுயிர்க்குந்
தானே யனைவர்க்குந் தந்தைதாய் — தானே
பரமனைநீ யென்றும் பணிந்தும் பரவி
கரமனைநீ கண்ணீர் கலுழ்ந்து.

9. கருமேக வண்ணற்குங் கஞ்சனுக்கு மெட்டா
வுருமேக நாதனைநீ யுள்ளில் — வருநாம
மோர்நாம மீர்நாம முன்றுமை நன்றுமஞ்
சேர்நாமச் சீர்த்தி செலுத்து.

10. செப்பரிய நின்மலனைத் தேவர் கடங்கோனை
யொப்பரிய மாமணியை யுள்வாழ்வை — யப்ப
வருவாகி நின்ற வதிப னுனக்கு
ருவாகிக் காப்பா னுளம்.

11. உள்ளத்தி னீங்காத வுத்தமனை வானாறு
வெள்ளத்தி னீங்காத வேதவித்தைக் — கள்ளத்திற்
காணாக் கருப்பொருளைக் காப்பொருளைச் செம்பொருளைப்
பேணார்க்கு முண்டோநற் பேறு.

12. பேரா யிரமுடைய பெம்மானை யம்மானை
யாரா வமுதை யரவானை — யாராய்க
கருணா லயத்தின் கழல்பணியா தோர்தாம்
மருளா லயத்தின்மாய் வார்.

13. மாய்சதானே மாமன் மதியாத வன்மத்தான்
மாய்த்தானே மாமன் மதித்தேத்துங் — காய்தரானே
பூத்தானை வாய்த்தானை போத்தானை போர்த்தானே
மாற்றானை மாய்த்தான் மறந்து.

14. மறந்தவனை யன்றி வழுத்துமோ வுன்னாவு
மறந்தவனை யன்றுமக மாய்த்தோன் — சிறந்த
பகலவன் கண்ணைப் பறித்தான் வெகுண்டு
மிகலில னெண்பறிப்பா னேற்று.

15. எண்ணாஞ்சொற் றீர ரினியனா வின்புற்றான்
மண்ணொடுவிண் கீண்டு வளர்ந்தானே - பெண்ணை
யிடத்தான இடைத்தா னிடர்த்தா னிடத்தா
நடத்தா னடத்தா னவில்.

16. வில்லடிக்குங் கல்லடிக்கும் வீடளிக்கும் வித்தகனுன்
சொல்லடிக்குஞ் சோராச் சுகமளிக்கும் - வில்லடிக்குத்
தாங்கினர்தம் புண்ணாறுந் தாரணியிற் சொல்லடிக்குத்
தாங்கினருந் தாங்குவரோ தான்.

17. தாதாவுஞ் சங்கரனே சார்ந்திரப் போனும்நீ
தாதாநீ தாவென்றே சாற்றினாற் - றாதாவும்
மாலவனுந் தேறா மனையளிப்பான் வாழ்வளிப்பான்
மேலவனைப் போற்றாய் விரைந்து.

18. விரைந்துமுடி கல்லின்மேன் மெய்த்தொண்டர் மோத
விரைந்துதிருக் கைகொண்டு மெய்யன் - கரைந்துயர்
வான் சேர்த்தான் மாக்கருணை வாரிதியின் செங்கமல
மான் சேர்த்தா னேத்துமடி வாழ்த்து.

19. மான்சேர்த்தான் மால்சேர்த்தான் மாதேவ னென்பாயோ
மான்சேர்த்தான் மால்சேர்த்தான் மாதேவன் - வான்சேர
குருகுய்யச் செய்தானே கூடற் பெருமானை
கருவுய்யச் செய்வானே கைதது.

20. கைம்மா வுரியேற்றான் காமனையுந் தான்வென்றான்
கைம்மா கரையேற்றான் காணாத - வம்மா
னருந்தவஞ் செய்தே யனங்கனையும் பெற்றா
னிருந்தவரா சேற்ற மியம்பு.

21 இருந்தவர்க்குங் காணரிய வெம்மான் பரவை
யிருந்தடத்திற் றூது மியன்றா - னிருந்தவனைப்
போற்றப்பல் பாவுண்டு புண்ணியனும் நீசானைத்
தோற்றவருள் வந்தருள்வான் சொல்.

22. சொற்கலை தேர்ந்தோருட் டோன்று மணிச்சுடரே
விற்கலை யம்புலியும் வேண்டினனே - சொற்கலையாப்
பாட்டிற் பதம்பரப்பி பல்பொருட்சே ருண்டியுண
டாட்டிற் பதம் பரப்பு மாறு.

23. ஆறு தலைக்கணிந்தா னாறுதலைக் கொண்டேநீ
வேறு தலைவனைநீ வேண்டாதே - யாறுதலை
பெற்றோனுஞ் சம்பந்தன் பிஞ்ஞகன்றன் முண்டகத்தாளை
பெற்றோனுஞ் சம்பந்தன் பேர்.

24. பேராப் பெரும்பிழையைப் பேதைநீ செய்தாலும்
பேராப் பெரும்புகழாக் கொள்வானே - பேராத
தந்தைகொலை செய்த தாயன்மா பாதகந்தீர்த்
துந்தைவினை கொள்வா னுவந்து.

25. உவக்குநீ முப்பாச மோட்டுவோ யுன்ற
னவந்துணி யைம்பாச மாற்றீச் - சிவந்துணி
செஞ்சடையான் பாதத்தைச் சேவித்து வந்தன்கண்
பஞ்சடையா முன்னே பகர்.

26. பஞ்சாக் கரத்தின் பதார்த்தம் பவவிரும்பைப்
பஞ்சாக் கரமெனப் பற்றறுத்தோ - ரெஞ்சாத
அஞ்சறுக்கும் பத்தறுக்கு மாறறுக்கும் புத்தறுக்கும்
நஞ்சறுக்கும் பேயறுக்கும் நாட்டு.

27. நஞ்சர்க்கும் பேயர்க்கும் நல்லபதம் நல்கிடுவான்
நஞ்சற்கும் வானளிக்கும் நம்பனுமே - கஞ்சி
யொருமாவின் கீழிருந் தோங்கிவளர் தேவின்
மருமா மலர்த்தாள் வணங்கு.

28. மருமா மலர்த்தாள் வணங்குமபி ராமி
மருமா மலர்த்தாண் மனதிற் - றருமா
வொருமா வுரித்தா யொருமா வுரித்தா
யொருமா வுரித்தா யுவ.

29 வகாரக் கருவிகொடு வாறுதி தந்த
சிகாரத் தொருமுதலைச் செப்ப - மகார
ககார மல மறுமாம் நல்லா யுரைத்தேன்
யகார நிலைநின்றே னின்று.

30. இன்றுப் பெரும்பிணிச் சூட்சிக் கிரையாயே
பொன்றுப் புலனு லுளமடங்கி - மனனுச்
சுணங்கனைப்போ னின்றேற்குச் சூக்குமமும் தந்தா
னணங்கனையாள் பாகத் தரசு.

31. பாகத் தரசு பதிநிலையும் பார்முதலாஞ்
சோகந் தவிர்க்குந் துணைநிலையு - மாகக்
கதையான் கதியுங் கடைப்படுமே சங்கக்
கதையான் கழறடைக் கண்.

32. கண்ணுளா பண்ணுளா காந்தா நடனஞ்ச
முலைனுளா வுணமை புரையாளா - மனனுளா
வேயவினையை வனந்தே யுளம்வெதுப்பா யென்றுசொலித்
தீவினையை யிப்புவியிற் சிந்து.

33. சிந்தைதனிற் றோன்றுஞ் சிதாகாச சின்மயத்தைப்
பந்தமற நீமநமே பற்றுவையேல் - முந்தை
வினையெல்லாம் வெந்தோட வேரோடும் வீழ்த்
தனையொப்பான் றாட்சரணந் தால்

34 சரணஞ் சரணமெனச் சந்ததமுஞ் சான்றோர்
மரணம பொருந்துரு வணணங - சரணம்
பொறிமுதலாக தத்துவஙகள் பொன்னடியைப் போற்ற
வறிவிப்பான் றண்ணருளினுல்.

35. அருளினு லையன்று ளான்றோ ரறிவார்
தெருளினு லனறிசிய தேரு - மருளான
மயாவதும் வலாரிமுதற் றேவரெலாம வந்தே
யியங்கு நடராசனை யேத்து.

36. ஏதுவுமே யான்மாக்க ளிஷ்டசித்தி யாவெல்லாங்
கோத்தலினுற் கிட்டியதோர் கொள்கைபோன் - மாத்துய
தங்கச் சிலையான சரணமுன வெணணத்திற் [ர்ந்த
சங்கை யறவேயுந் தான்.

37. தானதுவாய்த் தங்குந் தனிப்பரனைச் சங்கரனை
வானவெளி யியப்பு மண்வாழ்வை - மோனகுரு
வானவரை யக்கருதன் மானைப்பினை புண்ணியபி
மானமுட னேமநனே வாழ்த்து.

38. வாழ்த்துதற்கு வாயிருக்க மாயவாழ்க்கை யைவிட்டுப்
பாழ்த்துவர் மானபிலனைப் பற்றுமற் - வாழ்த்த
பிறப்பறுக்கப் பிஞ்ஞகன்றன் பேர்ப்பீஜ விஞ்ஞைச
சிறப்பதனைச் சிந்தந்தே தேடு.

9. தேடினார்த் தெய்வ வாதன் றிசைமுகனும்
பாடினா ருன்னாசிவ பத்தியா - னாடியே
செங்காட்டுத் தொண்டர்சேய்ச் சீராளன் றான்றின்ற
வங்காட்டி லாடியையீ யன்று.

10. ஆடிக் குதித்தே அறவே தவிர்த்துப்பின்
றேடித் தனதுபதஞ் சேறவார் - ஓடித்
தலையாற் கயிலைபோய்ச் சார்ந்தா ரவர்தங்
குலையாப் பதத்தைநீ கூடு.

11. கூடுவிட்டுக் கூடடைந்த கோடாத கொள்கைசேர்
நாடுவிட்ட நற்சித்தர் ஞாயம்போற் - சேடுவிட்ட
வெச்சினுகர் குக்கல்போ லேமாந்தில் லாமலே
நசினார்க் கின்பனையே நாடு.

12. நாடுமுயர் நாதனையே நாளு நயந்தக்காற்
தேடுமுயர் சேவடிகள் சேருமே - பாடுமுயர்
பத்தா நிதமுமே பல்லாண்டு பாலித்த
நித்தர் தமைநீயு நேடு.

13. நித்தா நிமலா நிரஞ்சனா நின்மலா
வத்தா வமலா வரஹரா - சித்தா
வனந்தா வழலாடி யைம்முகவோ வென்றே
வணந்த நடராசரை யணை.

14. சனகரை மூப்புமே தாண்டி வருமுன்
வரைபரை நாதரை வாழ்த்து - கரைதரை
ஆழியான் கண்மிழலை யாச்சித்துச் சங்கையு
மாழியு மண்ணினா னல்.

15. ஆலமது வுண்ட வதிசயங் கேட்டிலையோ
ஞால மதுவுண்ட நாரணனுங் - கோலமதி
கொள்ளுங்கங் காளாவென் கொற்றவர கூவெனவே
வெள்ளிப் புரண்டனன்காண் வேந்து.

46. காண்பாயே கண்ணுதலை மெய்க்கருத்தி னானோக்கி
மாண்பாய்நீ நெஞ்சே வழுத்துதியால் - வான்பாய்
பரிமிசைச் சேரன் பரமன் பதிசேர்
பரிசினை நீயுமே பற்று.

47. பற்றற்றார் தம்மோடு பையவே நேசித்துஞ்
சுற்றத்தார் தம்மைநீ சூழாதே - துற்றத்தார்
புற்றத்தார் தம்மைப் பொருந்தியே போற்றினா
லற்றைத்தான் வேமே யகம்.

48. அகம்பிர மாஸ்மியென் றாரியன் சொன்ன
சுகப்பிரம ரிஷீஇ சூட்சம் - ஜகம்பர்
உகார்த்தமு மூன்றிய வூழ்வினைகள் வீயும்
இகாந்தன்னி னீமனமே யெண்.

49. எண்ணும் பிறப்பெல்லா மெத்தனையோ வுண்டென்றே
யெண்ணும் பெரியோ ரியம்பவுமே - துன்றுமல
வாணவத்தை வேரோடு மையமற வீழ்த்தினாற்
காணவத்தை கைத்திடுங்காண் காப்பு.

50. காப்பெயிலை மூன்றுடையார் காயும் புராந்தகன்றன்
சேப்பயிணாட் செம்மலரைச் சேவிப்பீ - மாப்பயிலு
மாதவனும் பாயலுடன் மன்றினிலே வந்தணைந்தான்
நாதவன்பாய் நற்பதத்தை நாட்டு.

51. நாட்டுமுயர் நாதன்றன் நற்பதத்தை நீமனமே
யீட்டுமுயர் பத்தியினா லேத்திவாய் - நாட்டமுயர்
ஆட்டமுய ரம்பலவ ரன்றுபாணற் காளாகிக்
காட்டமுயர் நாட்டதனிற் காண்.

52. காட்டிற் புலியே கருணையாற் பாலூட்டும்
நாட்டிற் புலிக்குட்டி நல்தும்பால் - பாட்டிலுயர்
பத்தர்க்காட் செய்யும் பரமன் றிருப்பதமே
சித்தத்தாற் செப்பவருஞ் சீர்.

53. சீர்மலியு மாறன் சிவலோகங் காணவருட்
பேர்மலியும் பெம்மானைப் பேணுதியேற் - கார்மலியுந்
தொல்பிறவித் துன்பத்தாற் றோன்றுமிடை யூறெல்லாம்
புல்பனிபோற் போமென்னப் போற்று.

54. போவார் வருவார் புரளுவார் வீழ்ந்தழுவார்
தேவாவென் பாரெங்குஞ் சித்தர்கள் - பாவார்
பரமன்கோ லங்கண்டு பாற்கடல் வந்த
சிரமணிந்தோன் சிற்சபையைத் தேடு.

55. சிற்பரமாய்ச் சின்மயமாய்த் தேவர்தங் கோனாய்ப்பொன்
விற்பரமா வென்றேநீ வேண்டுவையேல் - தற்பரமா
மானந்தம் பெற்றே யளவில்லா வின்பிரம
வானந்தங் காணு மறி.

56. தம்மனே பாவத்தாற் சந்ததமும் போற்றினோர்
தம்மனோர் பாவத்தைத் தான்றள்ளும் - பெம்மனே
மன்றுசேர் கூடலின் மாபாத கந்தீர்செங்
கன்றுசேர் சுந்தரன்றான் காண்.

57. சுந்தரஞ்சேர் சுந்தரனார் சூட்சமுடன் கூறுங்கான்
மந்தரஞ்சேர் வாரிதியில் வாசுகிதன் - னஞ்சதனை
தந்தரஞ்சேர் சுந்தரனார் தன்கையா லீந்தகடு
கந்தரஞ்சேர் சுந்தரனே கல்.

58. கல்லாலின் கீழமருங் காட்சிக் குருநாதன்
வல்லாரின் னல்வர்க்கும் வாக்களிக்கும் - கல்லாலே
லீசுபதச் சக்கியற்கும் வில்வீசு பற்குணற்குந்
தேசுபதந் தந்ததேவன் றேர்.

59. தேர்மனத்தா ருட்கோயிற் செங்கதிர்போற் றோன்றுமந்த
வார்தனத்தாட் பாகனு மாதேவன் - பாரிடத்துப்
பிட்டுக்கு மண்சுமந்த பின்னுகனே யென்றுநும்
பிட்டுப் பதம்பெறவே பேசு.

60. பேசுபுகழ்க்காரிகையும் பின்றோர்க்க மன்றும்
ஆசிலெழி லம்பிகைதன் னன்பனையே - வாசகமாம்
மாணிக்கச் செந்தேனை மாந்தப் பரியிவர்ந்தோன்
காணிற்கச் சிற்றையாராங் கள்.

61. கள்சொரியுங் கஞ்சனுமே கண்சொரியுங் கண்ணனுமப்
புள்ளன்ன மேனமாய்ப் போயும்பார் - தள்ளணியு
மம்புலியுங் கொண்டதலை யந்தகனைச் சாய்த்தபத
மம்புலியீ சன்னறியா ராழ்ந்து.

62. அம்புலியும் பாம்புமோ ராட்டுக்கா லுக்காகக்
கம்பொலியும் வேணியனைக் காதலித்துப் - பொம்மொலியு
வெண்சங்கத் தானுடனே விண்ணோர் பணிந்துதொழு
மெண்சங்கத் தானே யியம்பு.

63. சங்கபது மாநிதியைத் தாங்குங் குபேரன்றன்
றங்கசித் தாநிதித் தோழனைநீ - யங்கயத்தின்
சாபந்தீ ரம்மதுரைத் தககன்றன் மாமருகன்
பாபந்தீர் தன்மதுரை பார்.

64. பார்முழுதும் பெற்றெடுத்த பார்வதியுங் காஞ்சியிலோர்
கார்பயிலு மாமரத்தின் காலின்கீழ் - சீர்பயிலும்
நம்பெருமான் றன்னையே நோன்பிருந்தும் பூசித்தே
யெம்பெருமா னென்று ளியைந்து.

65. ஐந்தா மிலிங்கமே யாகாச லிங்கமதா
முய்ந்தா மிலமே யுரைக்கக்கேள் - பைந்தாரோன்
மால்சுமக்கும் வாரணத்தான் வாழ்த்து நடராசன்னூர்
மால்சுமக்குங் காரணத்தால் வாழ்த்து.

66. காரணங்கள் காணுமுன் கட்டங்கள் கைவிடுமே
யாரணங்கள் காணுமுன் றண்டவனே - யாரணனு
நாரணனுந் தேடிய வெஞ்ஞான்றுங் கிடைப்பரிய
காரணனை யன்பி ன்கருது.

67 கருத்துடையா ரன்றிக் கனகசபை யெண்ணா
கருத்துடையா ரென்றே கருது - விருப்புடைய
தம்முள்ளே சார்வதா தான்வசிக்கும் தம்பிரா
னம்முள்ளே சார்வதா வாற்று.

68. சார்பெருகுஞ் செங்கரும்பைச் சாந்துகல் லானைக்கும்
நார்பெருக நட்கடவு ணல்கினனாற் - பார்பெருகு
மார்பெருகுந் திமபறகு மம்பெருகுங் கொடைதலை
யூர்பெருகு முதமனே யோது.

69. ஓதுபுகழப்ப ருவாக்கடலிற் றள்ளுண்டு
மோது, சிவாயநமா வென்றுமே - யோதியே
யாழ்கடலைத் தாண்டியே ழாழ்கடலுந் தாண்டினரே
யூழ்கெடவத் தாண்டவனை ஓது. (கா

70. தாண்டவஞ்சேர் தாண்டவன்றன் றூண்மலரைத்தாங்கின
மாண்டவஞ்சேர் மாயையின் மாழ்கிலரே மாண்டவஞ்சே
மார்க்கண்ட னென்றுமொரு மாபதவி பெற்றவிதங்
கார்க்கண்டன் பூசித்தக்கால்.

71. கார்க்கண்டஞ் சேர்கண்டன் கண்ணுதலைக் கண்ணுற்றாற்
காரக்கண்டக் காரிருளுங் கைவிடுமே - கார்கண்ட
தொல்லுலகிற் காளத்தித் தோன்றலுமே காட்சிதரும்
வில்லுலவுங் கண்ணப்ப வேட்கு.

72. வில்லுலவுங் கண்ணப்பன் மேனாள் விசயனுமா
யல்லுலவு மம்பிகைதன் னண்ணலுடன் - புல்லுலவுஞ்
செங்காட்டிற் போர்புரிந்தான் தேவியும்வெரிக்காணச்
செங்காட்டிற் சேர்ந்தான்பாற் சேர்ந்து.

73. சேவேறிப் பத்தர்முனஞ் சேவையையுந் தந்துமறை
மாவேறி மாறனையும் வாழ்வித்தான் - றூவேறி
காவேரி யாற்றிற் கனகசபை யானென்ற
பூவேரி யாற்றூன் புகல்.

74. புகலுமறை போற்றும் பொதுவி னடஞ்செய்
புகலுமறை யோரிற் புனிதன் - சகமகிழத
தானு மொருத்தனே சார்ந்துவகி தம்பிரான்
மானும் பொறுததான் மகிழ்ந்து.

75. மகிழ்ந்துதில் லைவாழு மாமணியை யுள்ள
மகிழ்ந்துமே நீயும் வழுத்திப் - புகழ்ந்துபுலி
பெண்ணாசை பொன்னாசை பேணுதிரியாம
லெண்ணாசை யார்கோ னிறைஞ்சு,

76. இறையா நடனமிடு மீசன் றிருத்தா
ளிறையாம் பொழுதுமே யேத்திப் - கறையா
நமன்றம ரோர்பொழுது நாடவே நாடார்
நயன்றமர் நாதனைநீ நாடு.

77. காவிருக்க நாதன்றன் னாமம் பலவிருக்கப்
பாவிருக்கப் பாம்பணியோன் பாடிலையாற் - சாவிருக்க
சந்ததமும் பொய்யாமுன் சாருடம்பைச் சண்டனுமே
வந்தத்முஞ் செய்யாமுன் வாழ்த்து.

78. முன்னுவாய் நீயு முடிந்தபிறப் பெத்தனையோ
வின்னும் வருபிறப் பெத்தனையோ - துனணிப்
பிறப்பிலிதன் பாதம் பிறப்பறுக்கு மல்லாற
றிறப்புலித னிச்சுரனைசசேர்.

79. சேரார் பிறப்புநோய் தீரார் திரிபுரத்துச்
சேரார் பொடியாக்குந் தேவனைக் - காரார்
மயலார்ந் தோர் காணாத மாமலையான் செல்விக்
கயலாடன் பாகத்தான் கல்.

80. கலத்திற் படைத்தகறி காணா மகவாய்க்
கலத்தி லிரந்தோன் கருதி - நலத்தின்
வரச்செய்யும் வள்ளலுமே மான்மழுவு மேற்று
வரச்செயும் நேர்ந்தானே வந்து-

81. வரத்தையன் பர்க்கருளும் வாழ்நடன பாதன்
றரத்தையுன் சித்தமிசைச் சாற்றிற் - சிரத்தை
தரும்பர மானந்தருஞ் சாலோக நாலுந்
தரும்பரமா னந்தந் தரும்.

82. பரனென்னும் பண்ணவனைப் பாங்காய்ப் பணிந்தால்
வரனென்னும் வாழ்பதவி வாய்க்கும் - வரனென்றுஞ்
சொல்லு மடியாரைத தோத்திரமே செய்தியமன்
செல்லும் பகடோடுந் தேர்ந்து.

83. தேவி யுளமகிழச் சிற்சபையிற் காளியுடன்
ருவி யுளமகிழத் தாண்டவஞ்செய் - யோவி
லருளேயாக கையாக்கொள ளாணடவனற் பாத
மருளேயாக் கைவிடுமே மற்று.

84. மற்றொன்றும் வேண்டாமே வாழ்த்தினேன் முத்திநலஞ்
சிற்றம பலத்தான்றன சீராட - லுற்றருளும்
வந்தருளும் பத்தருளம் வாழந்தருளுந் தாயனையான்
றாதருளுந் தாட்கமலத் தாள்.

85. அருட்டிரளை யானந்த வாழ்க்கடலை யல்லா
விருட்டிரளைத் தாண்டவழி யேலா - தெருட்டிரளைப்
பெற்றாரே போற்றுமந்த பிததனெனும் பெம்மானை
மற்றாரே போறற வலர்.

86. வல்லிருளா மஞ்ஞான மாற்றும் வகையுரைக்கின்
வல்லருளா மின்றொளியின் வாளிறேல் - வல்லிருளை
வீசடியா வீழ்த்தி விளங்கும் நடராசன்
றேசடியைச சென்னிமிசைச் சேர்.

87. தேவர்க்கரியதிருத் தில்லைத் தேவன்றன்
பாவர்க்கரிய பரம்பத - மூவர்
பரவைபுகழ்ந்தேத்தும் பரம்பர மானேன்
பரவைபுகழ்ந் தேத்தும் பதம்.

88. வையத்தா வானத்தார் மற்றெவருங் காணாரே
ஐயத்தா ராகி யமர்ந்தானைச் - செய்யத்தார்
பூண்டானை யென்பரவம் பூண்டானை யன்பருளப்
பூண்டானை யுள்ளும் பொருள்.

89. பொய்யா முளத்தார்க்குட் போந்து விளங்காமல்
மெய்யா முளத்தார்க்கு மேவன்பன் - செய்யாப்
பழியஞ்சி யென்னும்பேர் பண்டேற்றா னான்றன்
பழியஞ்சி யென்னானைப் பற்று.

90 அஞ்சன வண்ணத்தா னனுதினமு மஞ்சலிசெய்
தஞ்சனமை யென்று மதிப்பனையே - யஞ்சனஞ்சேர்
சீபாடிச் சோர்ந்துமெய்ச் சேடனுடனா னஞ்சியுளான்
சீர்நாடிச் சிற்சபையைச் சேர்நாது.

91. நதிப்பா யவன்புகழைச் சொல்வாயெஞ் ஞான்றும்
மதிப்பாய் மலாததாணை மறவாய் - சதிக்கே
நடமாடுந் துச்சனரை நாடாமன் மன்றி ன
னடமாடு நாதனைநீ நயபு.

92. நம்பிநேரைக் கைவிடான்சாண் ணாவலூரின் னம்பியுமே
தம்பிரான் றோழனெனச் சாற்றுமதை - நம்பியேதான்
வெள்ளஞ் சடையணியும் வெணபிறையோன் றாட்கமல
முள்ளஞ் சடையநீ யோது.

93. ஓதாத வன்புகழை யோதத் துணிந்தெழுந்தாய்
கோதாரு நினபுன்மை கொண்டருளுவான - தாதாரும்
பூத்தாரும் பைத்தாரும் புற்றாரும் பெம்மானின்
பாத்தாருங் கொள்வான் பரிந்து.

94. பரியை நரியாக்கிப் பாண்டியன்றன் வாழ்வாம்
வரியைச் சரியாக்கி வந்தோனை - கிரியைநற் (ணின்
பொன்னில்லாப் போற்றலரைப் பொன்றுவிக்கும் புண்ணிய
புன்னில்லாக்கை கெடுப்பான் போற்று.

95. கைதருமே காலன்றன் காலன்றன் காற்பதமே
கைதருமே கைதவங்கள் கைவிடுமோ - கைதருமே
குன்றாப்பேரின்பங் கொடுக்குமென் கொற்றவா
குன்றாமன் றாவெனவே கூறு.

96. குன்றைக் குடையாகக் கொண்டானுங் காணாத
கொன்றைத் தொடையாகக் கொண்டானே - நின்றுறும்
நின்றீ யெழுத்தையு நீரெழுத்தா யாக்கும்பார்
நின்றீ ரெழுத்தே நிலை.

97. நில்லாத யாக்கை நிலையாது நின்மலன்பேர்
கல்லாது துன்பங் கலையாது - செல்லாதே
யள்ளா குறையா வறையா பிறவாதே
யுள்ளா வுறைவா யுரை.

98. உரையாத செம்பொன்னை யொண்சாணை யிட்டுக்
கரையாத மாணிக்கக் கல்லை - புரையாருந்
தில்லை யமர்ந்தானைச் சேவித்தா னின்னெஞ்சக்
கல்லைக் கரைப்பான் கருது.

99. பாம்பும் புலியும் பணியாகக் கொண்டானே
பாம்பும் புலியும் பணிய மன்றான் - பாம்பி
னடுநெஞ் சமிதா வயின்றா னந்தாதித்
தொடுவிஞ்சை சூட்டுவான் சூட்டு.

100 சூட்டினாற் சூடனோ சுத்தபரி பூரணனே
நாட்டினா னாடானோ நாதனுமே - பாட்டினா
னூட்டினான் காட்டினா னோட்டினா னாட்டினான்
வேட்டினான் கூட்டினான் வீடு.

101. வீடும் பெறுவாய் விமலன் றிருச்சரணைப்
பாடும் பெறுவாய் பரசிவமாம் - நீடுங்
கருத்தனுமே காட்டினான் காட்சியுங் காண்பாய்க்
கருத்தனுமே யோட்டினானே காண்.

102. காட்சிக் கருத்துரையாங் கண்டன் றமிழ்மாலை
பாட்சிக் கிருஷ்ணசாமி யந்தாதி - சூட்சிக
களிவார் மலர்வேய் கணுநற் பெருமான்
றொளிவார் சிவபதநற் சீர்.

(முற்றும்.)

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவுறந்தைப்
# பதிற்றுப்பத்தந்தாதி.

இஃது

உறையூர் வித்வான்

சி. வாஞ்சைலிங்க வைத்தியநாதசெட்டியா

ரவர்களால்

இயற்றப்பட்டு,

திருத்தவத்துறை மிராசுதாரர்

ம-ா-ா-ஸ்ரீ

தம்பாச்சியாபிள்ளை குமாரர்

கனகசபைப்பிள்ளை யவர்களால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சார்வரி௵ ஆவணிமீ. 1900

உ

கணபதி துணை.

# சிறப்புப்பாயிரம்.

சென்னை அஷ்டாவதானம்

## பூவை. கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றியது.

நறையூர்பூந் தடமையிந ஞாயகரினு நணிகளுறு நளினி சூழ்ந்த
வுறையூரநற் பெருமார்குப் பதிற்றுப்பத் தந்தாதி யுசித மேவு
முறையூர்புத் தமுதனைய சுவைமலியு ஞ்செஞ்சொற்கண் முயபகச செ
ற்றான், பொறையூர்நம வாஞ்சைலியக வைத்தியநா தப்புலவன் புகழ்
[மிக் கோனே.

இப்பிரபந்தஞ் செய்தவர மாணாக்கரு ளொருவராகிய

கீழப்பழூரில் வசிக்கும் தவத்துறை

## சா. அப்பாவு பிள்ளையவர்களாற்

செய்யப்பட்டது.

மாமேவு முலகினிற் சென்னிநா டிதுவென
வயங்குநற் சென்னி நாட்டின்
மாதலம தாமுறந் தைப்பதியின் மாலூர
மரநிழலில் வாழ்பதி யினற்
றாமேவு மம்போ ருகச்சரண மீதிற்
றுலங்கவே பப்பத் ததாந்
தகளிலந் தாதிகண் டான்கண்டு பயமெனச
சொல்லிப் புகழ்ந்து போற்றத்
தேமேவு மாலையணி மால்சிதம் பரவேள்செய்
தியநல் வரபுத் திரன
தியாகரா ஜப்பெயர்கொள் புலவனன் மாணவன்
சித்தாந்த வேதாந்த நூல்
பாயேவு பஞ்சல ட்சணவிலக் கியவுததி
பருகிமழை பொழிபு மேகம்
பக்தர்புகழ் வாஞ்சைலிய கம்வைத் தியநாத
பாவலவ னென்குர வனே.

திருப்பரங்குன்றம்
## அ. நாராயணசரணரவர்களாற்
செய்யப்பட்டது.

சீர்பூத்த செம்பியனுக் குறைவிடமா நகரிறைக்குச் சிதையா வன்பி, னேர்பூத்த பதிற்றுப்பத் தந்தாதி யெனும்பெயரு மிலங்க நாட்டிப், பேர்பூத்த சொற்சுவையும் பொருட்சுவையு மொருங்கமைத்துப் பிறங்கச் செய்தான், பார்பூத்த வணிகருலச் சிதம்பரவேள் செய்தவத்தின் பயனாற் றோன்றி.

தொகைநூலும் வகைநூலும் விரிநூலு முழுதுணர்ந்து துகடீரன்பின், றகைசான்ற வுளமுடையார் குழுவகலாத் தன்மையினு றமிழ்நூ லாய்ந்து, வுகைவிடையா னடிமறவாத் தியாகரா ஜப்புலவ னுதவப் பெற்ற, வகையமைந்த கல்வியினன் வாஞ்சைவைத் தியநாத வண்மையோனே.

இப்பிரபந்தஞ் செய்தார்பாற் கல்விபயின்றவராகிய
உறையூர்
## செ. சாமிநாதபிள்ளையவர்களாற்
செய்யப்பட்டது.

மாமேவு திருவுறந்தை யாலூரத் தடியமரும் வரதன் றருளிற்
றூமேவு பதிற்றுப்பத் தந்தாதி யெனுஞ்சொற்றூர் துதித்த ணிந்தா
ளுமேவு பலகலையு நன்குணர வுணர்த்தியெனை யாளு நாதன்
பூமேவு வாஞ்சைவைத் தியநாத னெனும்பெயர்கொள் புலமை யோனே.

ஷை யூர் வெஸ்லியன் மிஷியோன்
ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
## சுப்பிரமணிய பிள்ளையவர்களாற்
செய்யப்பட்டது.

உலகுபுக ழுறந்தைநக ருயர்வில்வ வனநிழலி லொளிர்வெண்டிங்க, ளிலகுபரஞ் சுடர்ப்பரம னிணையடிக்குப் பொருத்தமுற வினியதிஞ்சொற், பலகலைக ளுடனுய்ந்து பதிற்றுப்பத் தந்தாதி பகர்ந்தான் மேலோர், நலமிகுத்த சிதம்பரவே ளீன்றவைத் தியநாத நாவலோனே.

திருச்சிற்றம்பலம்.

# திருவுறந்தைப்
# பதிற்றுப்பத்தந்தாதி.

## காப்பு.

சீரா ருறநதைப் பதிவாழுந் திகழை வண்ணன் மலரடிக்குப்
பாரார் பதிற்றுப் பத்தென்று பகரந் தாதி பாடுறவே
யேரார் சித்தி புத்திகளை யிமையோர் போற்ற மணந்தருளுங்
காரார் கரிமா முகத்தவனைக் கருதி வாழ்த்தி வணங்கிடுவாம்.

## சமயாசாரியர்.

காழி வந்த கவுணியப் பிள்ளையை
யாழி நீந்திய வப்பனு ரூரனை
வாழி செம்மணி வாசக வள்ளலைப்
பாழி வெந்துயர் போக்கப் பணிகுவாம்.

## நூல்.

திருவார் கமலச் சேவடியுந் தேனார் கொன்றைச் சடைமுடியு, மருவார்கார்த்தி மதியிடமும் வரதா பயமு மழுமானுங், கருதார் புரங்க ளொருமூன்றுங் கனிபுன் னகையா லெரித்தருளு, மொருமா தேவ காட்டியொன்று முரையா தொழிதல் முறையேயோ. (க)

முறையே யில்லாக் கடைநாயேன் முன்னே யடிமை யுனக்கானே, னிறையே யெனக்காண் டவனீயே யிதுவோ வனாதி வழக்காகுங், குறையா தொன்று மில்லாக்குக் குடமா நகரி லுறைவோனே, கறையார் கண்டத் தெண்டோளா காக்கக் கடமை நினக்காமே. (உ)

ஆமே தனக்கோ ரிடமாக்கொண் டமர்வோ னயனிந் திரன் விண்ணோர், தாமே முதலென் றுணையுணராத் தற்போ தத்தான் மாண்டார்க, ளாமே புரியும் பகடேர்ந்து நமன்றன் வரினு னென்செய்வேன், பாமே வுறுங்கூ விளவனத்தெம் பதியே கதியை யருள்வாயே. (௩)

அருள்வாய் காந்தி மதியொடுசென் றடியார்க் குறுதுன் பினையகற்றி, மருள்வாய் மனப்பா தகனுனக்கு வழங்கே ன ருணீ யென்பாயே, லிருள்வாய் வன்றி யுருவெடுத்த விரும்பா தகனை முன்பாண்டாய், தெருள்வா யுதங்க முனிபோற்றுந் தேவே யதனை மறந்தாயோ. (௪)

மறந்தா யுறந்தைப் பதிவாழு மாதே வன்றன் மலரடி யைத், திறந்தான் சிறிது மில்லாப்புன் னெஞ்சே தீமை யக ன்றினிமே, னிறந்தா னுதங்க முனிக்கைந்து நிகழக் காட்டி யாண்டருளுஞ், சிறந்தார் போற்றும் வில்வவனத் தேவைத் தியானித் துய்வாயே. (௫)

உய்வாய் பொழுது நினையன்றி யுண்டோ மற்றோர் தெ ய்வமென, மெய்வாய் மறையா கமங்களெலா மெய்வே றின் றென் றுணர்த்தியவான், மொய்வாய் மானூ ரத்தடிவாழ் முத ல்வா முக்கண் வானவனே, யைவாய் செல்லு மவாவினையற் றவர்கள்போற்று மைவண்ணா. (௬)

வண்ணா விரண்டா யிரமுடையான் வாழ்த்தி வணங்கு மாமணியே, கண்ணா யிரந்தா னுடையானுங் கம்மூன் றானு நா ன்கானு, மண்ணா வப்பா வையாவென் றலறிக் கதறிக் காணா நின், றண்ணார் கமலத் தாட்டுணையென் றலையிற் சூட்டி யாண் டருளே. (௭)

அருளே பொழியுங் காந்திமதி யம்மை யிடமு மறவிடையு, மருளே தீர்முப் பானைந்தான் வயங்கு மவத்தை தனிற்காட்

டிப், பொருளே யமைமுக் கிச்சரம்வாழ் பொன்னே மணியே யருள்வாயே, யிருளேய் மனத்தேன் றனக்கருள லேலா தெ ன்பா ரிலைமன்னே. (அ)

இல்லும் வில்லுங் கல்லானை யிமையோ ரேத்தும் பெரு மானை, யல்லும் பகலு மானானை யயன்மால் காண்டற் கரியா னைச், சொல்லும் பொருளு மானானைச் சோமுன் றெரித்த நகையானைக், கொல்லுங் கரியை வெல்லுங்குக் குடமா நகரிற் கண்டேனே. (கூ)

கண்டா ரெல்லா மிவனாரென் றென்றே கருதி யதிசயி ப்பப், பண்டே செய்த வினையாவும் பறந்தே விடைகொண் டேயகலத், தண்டா யுதனுங் கண்டோடத் தமியேன் றலையி லடிசூட்டிக், கொண்டான் றனக்கே யாளாக்கிக் கோழிப் பதி யி லுறைவானே. (கO)

வேறு.

வானமே முதலா வைம்பெரும் பூதம் வயங்கரி மதியிய மான, னைமூர்த் தமுமா யயனரி முதலா வமைந்திடு மொன் பது மாகி, வானவா சிகளும் வசுந்தரை யோரும் வணங்கவா ரணப்பதி யமரு, ஞானநா யகனே யெனைப்பொருட் படுத்தி நயந்தருள் செய்வதெந் நாளோ. (கக)

நாளெலா மவமே கழித்தன னினது நாண்மல ரடியிணை மறந்தே, கோளெலா மெனக்கே சொந்தமா வுடையேன் கொடுஞ்சமன் வரினெவன் செய்வேன், வேளெலாப் படையு மிழந்துவெந் தொழிய வெந்தழற் கண்ணினைத் திறந்தோய், தூளெலாம் பொழிபூங் கூவிள வனத்துச் சோதியே யாதிநா யகனே. (கஉ)

நாயக னமர ரிந்திரன் பிரம னாரணன் முதலியர் தமக்குத், தூயவ னுறந்தைப் பதியினி லமர்ந்தோன் றனையடிப் புகழி

னை வழுத்தி, யாயமா திரத்தா ரெடுத்தெடுத் தேத்த வருள் பெறு மதுரநா வலர்கள், மாயமா கியமா லிந்திரன் வாழ்வை மனத்திடை மதிப்பது மிலையே. (கங)

மதியவிர் கங்கைச் சடைப்பெருங் கருணை வள்ளலே தெள்ளிய வமுதே, நுதியவிர் வாட்கை நாரணன் முதலோர் நுகரும்வான் செல்வமு மண்ணிற், பதியவிர் வாழ்க்கை மணிமுடியரசர் படைத்திடுஞ் செல்வமும் வேண்டேன், பொதியவிர்நதலர்பூஞ் சோலைசூ ழுறந்தைப் புண்ணியா விண்ணவர்க் கிறையே. (கச)

விண்ணவர்க் கிறைவன் வேண்டவெண் கரியும் விரைமலர்க் கற்பகத் தாரு, மண்ணிய வுச்சைச் சிரவமு முதலா வயங்கிய பொருளெலாந் தனது, தண்ணிய வருளாற் றந்தருளெனது சாமியாங் குமரனை யீன்ற, வண்ணலே யுறந்தைப் பதியினி லமரு மையனே காத்தருளெனையே. (கரு)

காத்தருள் புரியுங் கடனுனக் கென்றே களித்திருக் கின்றனன் வறிதே, யாத்தமா மறையா கமங்களிற் சொல்லு மருநெறி தன்னையே கைவிட், டேத்தையா முடலை யோம்பியே தினமு முண்டுதின் றுடுத்தியே யருள்வாய், வாய்த்தசீ ருறந்தைப் பதியினி லமரும் வள்ளலே தெள்ளிய வமுதே. (கசு)

தெள்ளிய வமுத லிங்கமென் றொருபேர் திருக்கட லூரினிற் பெற்றாய், நள்ளிய பனவச் சிறுவனை யாண்டே நயந்துனைப் பாடினே னருள்வாய், வள்ளிய வறிஞர் போற்றுறு முதங்க மறையவ னாகிய முனிவற், கொள்ளிய சித்த சுத்தியையளித்த வுறந்தைவா ழைவண்ண மணியே. (கஎ)

ஐவண்ண மணியே பழமறைக் கொழுந்தே யலையெறி யமுதவா ரிதியே, கைவண்ணத் தவனுங் கமலவே தியனுங்

காணரு நின்றிரு வடிவை, யுய்வண்ண வடியேன் புன்றலை சூட்டி யுறுதுயர் போக்குநா ளுளதோ, மெய்வண்ணப் பெரு மா மறைபயி லுறந்தை மேவிய சோதிநா யகனே. (கஅ)

சோதியே யெனைநீ சோதனை புரியேல் சோதிக்கத் தொடங்கிடு வாயே, லாதியே யுனக்கே யபயமென் றடியே னச்சினை விடத்தொடங் கிடுவேன், காதிசே யாய கௌசிகன் றனக்குக் கடுஞ்சின வசிட்டன்றுன் பொழித்த, நீதியே செல்வ நிறைதிரு வுறந்தை நிமலனே யமலவாழ் வருளே. (கக)

அமலவாழ் வாநின் னடியினிற் சேர்த்தே யஞ்சலென் றடியனை யருள்வாய், கமலநான் முகனுங் கருடகே தனனுங் கனவினுங் காண்டரு மணியே, விமலமா முனிவர் சித்தர்கள் போற்ற வில்வமூ லத்தினி லமரும், பமரமார் கூந்தற் பனிமொழித் துவாவாய்ப் பருவத வல்லிகா தலனே. (உ0)

வேறு.

காத லாகிக் கசிந்து கசிந்துநின்
சீத வாரிசச் சேவடி போற்றவே
போதன் காலன் புரிதுய ரற்றவே
யோத நீர்சூ ழுறந்தையெம் மண்ணலே. (உக)

உறந்தை மேவிய வுத்தம னேயுனை
மறந்து தீய வினையின் வலியினாற்
பிறந் திறந்து பெரிதிளைத் தேனருள்
பறந்து போகப் பழவினை யாவுமே. (உஉ)

யாவு மாகியு மல்லன வாயுமுத்
தேவு மாகியுந் தேவர்க ளியாவர்க்குங்
கோவு மாகியுங் கோழி நகருறை
பாவ நாச வருள்பஞ்ச வண்ணனே. (உ௩)

வண்ண வாரண மாநகர் மேவிய
வண்ண லேயுன் னடியிணை யன்றியோர்
பண்ண வர்கள் பதவியும் வேண்டிடே
னுண்மை யுண்மையீ துண்மை யெனைவிடேல். (உச)

என்னை யென்னையீ தென்னுடை மாதவம்
முன்னை நன்னெறி யாது முயன்றிலேன்
பொன்னை யன்னநின் ருள்போற்ற வைத்தனை
யன்னை யன்ன வமர்கோழி யண்ணலே. (உரு)

அண்ண லேயுன் னருமைத் திருவடி
யெண்ணி லேனிதற் கென்ன புரிகுவேன்
புண்ணி னேன்செய் புரைபொறுத் தாடியால்
விண்ணி னீள்வில்வ கானத்து வள்ளலே. (உசு)

வள்ள லேயுன் னடியை வழுத்தவென்
னுள்ள மென்றன் வசத்துற்ற தில்லையா
லெள்ள லையவோ வேழையென் செய்குவேன்
கொள்ளை யின்ப நிறைகோழி யப்பனே. (உஎ)

அப்ப னென்னுடை யன்னை குருதெய்வந்
துப்ப னென்னுயிர் துமதி யானவன்
தப்பொன் றில்லாத் தனுக்கே தனன்புக
ழொப்பொன் றில்லா வுறந்தைவா ழத்தனே. (உஅ)

அத்த னேயுறை யூரி லமர்ந்தரு
ணத்த னேவிடை யூர்க்கொண்ட நாதனே
பித்த னேன்செய் பிழையைப் பொறுத்திடிற்
சுத்த வன்பர்கள் சொல்லுவ ரேதமே. (உகூ)

ஏதி லானிவ னென்றெனைக் கைவிட
னீதி யோவரு ணின்மலை மேவுறு

பாதி யேகுறைப் பான்மதி சூடிய
வாதி யேயுறை யூருறை யையனே. (௯0)

### வேறு.

ஐயனே நினதற் புதத்திருக் கோயி லடியனேன் புகவருள் புரிவாய், வையக முழுதுஞ் சையென வெறுக்க வரம்பிகந் திரந்துழல் பவரும், வெய்யவா பாசக் கருக்குழி பலவும் வெருவுய ருறப்புகு வோருங், கையரு மென்றும் புகுதரா வுறந்தைக் கடிநக ரமர்பெருந் தேவே. (௯௧)

தேவொரு மூன்று மாகிமுத் தொழிலுஞ் செய்தொரு தொழிலுமில் லாதோய், நாவர சருள்சேர் ஞானசம் பந்தர் நம்பிமுன் னோர்களை யாண்ட, மாவர சரோரு கமலர்நேரடியின் மதித்தெனைச் சேர்த்தருள் புரிவாய், கூவர சாங்குக் குடக்திருப் பதியிற் கூவிள வனத்துறை பவனே. (௯௨)

உறைபுரை யெனது புரமொரு மூன்று மொண்கதிர பனியெனப் போக்கி, மறைமுழு துணர்மா தவச்சன காதி மாமுனி வரர்க்கினி தளித்த, நிறைசிவா நந்தத் திருவடியிருத்தி நித்திய ஞக்கியாண் டருள்வாய், பொறைநிகர் சிறையோரைந்துசூ ழுறந்தைப் புண்ணியா நண்ணரும் பொருளே. ()

பொருளிலே யுலக மிருத்தலா லதனைப் புரிந்திது வரையெவர் பாலு, மருவினை னலன்மேன் மருவவு மாட்டேன் மதித்தெனைக் காத்தருள் புரிவா, யருளெலாந் திரண்டோ ரற்புத வடிவா யமர்ந்தொளிர் தருபர சிவமே, திருவெலா மொருங்கே தருதிரு வுறந்தைத் திருத்தளி யமர்பெரும் பதியே.

பதிபசு பாச வியலொரு மூன்றும் பகுத்தறி வுறுத்தியபின்னர், நதிபதி யமர்கா ரணன்முத லோர்க ணனவினுங் கனவினு மறியாத், துதிபெறு நினது திருவடி சேர்த்துத் தூய்

மைப னுக்கியாண் டருள்வாய், பொதி யவிர்ந் தலர்பூம் பொ
ய்கைசூ ழுறந்தைப் பொற்றளி யமர்ந்ததே சிகனே. (௩௫)

தேசிக மூர்த்த மாகிவந் தடியேன் றீவினை போக்கியாண்
டருள்வாய், காசிபன் மனைவி கத்துரு வினதை கனுழ்ன்கார்க்
கோடனை யளித்த, மாசிலா மணியே மன்றத்தி லின்ப மாந
டம் புரிகின்ற பதியே, பேசிட முடியாப் பெருந்திரு வுறந்
தைப் பெருந்தளி யமர்ந்தருள் பவனே. (௩௬)

பவமெனுங் கடலிற் கிடந்துழல் கின்ற பாவியேன் படுந்
துயர் போக்கிச, சவமென வுலக நவின்றிடா வணநின் றூண்
மலர் சேர்த்தருள் புரிவா, யவநெறி போக்கித் தவநெறி செ
லுத்தி யடைந்தவர் தமக்கினி தருளுஞ்,சிவநெறி யுடையோர்
சூழ்தரு முறந்தைத் திருத்தளி யமர்ந்தசின் மயனே. (௩௭)

சின்மய மாய தில்லையம் பலத்திற் றிருநெடு மான்முழ
வறையத், தென்முக நோக்கிக் கன்மகள் களிக்கத் திருநடம
புரியுநின் னடியைக், கன்மனத் தடியேன் கண்டுகண் களிக்
கக் காட்டியாண் டருளுநா ளுளதோ, பொன்னெடுஞ் சிகரி
பொலிதிரு வுறந்தைப் பொற்றளி யமர்ந்தருள் பரனே.(௩௮)

பரமொரு தானென் றுணையிகழ்ந் தெதிர்ந்த பங்கய
னொருசிர மிழந்தான்,சிரமொரு மூன்று கொண்டுளா னெதிர
ந்து திருக்கழு முளுக்கிரை யானன், புரமொரு மூன்றுமெரி
த்தபுன் னகையாய் போற்றுறு மெற்கருள் புரிவா,புரமொரு
மூன்றோ டிரண்டுசூ ழுறந்தை யுத்தம தத்துவப் பொருளே.

தத்துவ முப்பத் தாறையுங் கடந்து தனிப்பர மாம்பெரு
வெளியிற், சுத்தமெய்ஞ் ஞாந நந்தமாய் விளங்குஞ் சோதி
யே யாதிநா யகனே, செத்தவ மானு னென்றிடா துலகர் சே
வடி சேர்த்தருள் புரிவாய், புத்தமு தாய பொன்னிசூ ழுறந்
தைப் புரியுறை விமலசங் கரனே. (௪0)

## வேறு.

சங்கரனென் றொருதிருப்பே ருனக்கே யெய்க்குஞ்
சதுமுகனு ரணன்முதல்மற் றமர ரியார்க்கும்
பங்கமிகு துயர்முழுது மொழித்தா நந்த
பரசிவபோ கந்தனையே கொடுத்த லாலே
கொங்குவிரி சந்தகின்மா மரங்கள் சாடிக்
குணகடலி னகடுகிழித் தேகும் பொன்னித்
துங்கமிகு நதிவலஞ்சூ ழுறந்தை வாழுஞ்
சுடரொளியே யடர்வினைதீர்த் தெனையாள் வாயே. (சக)

வாய்ந்தமணிப் பொதுநடஞ்செய் வள்ளா லுன்றன்
மலரடியை யனுதினமும் வழுத்தா தந்தோ
தேய்ந்தமதி நிகர்நுதலார் மயலிற் சிக்கித்
தீவினையே மிகப்புரியுஞ் சிறியேன் றன்னை
யாய்ந்தகலை கற்றுணர்நின் னடியார் கூட்ட
மணுகியவ ரடிப்பணியே செய்வித் தாள்வாய்
மாய்ந்தகரி சுடையமறை யவர்க ளோது
மறையொலியே நிறைபுறையூர் வாழுங் கோவே. (சஉ)

கோவடுவேல் வீரவா தித்த னோர்காற்
கொள்ளைமதம் பொழியொருஞ் சரமா வேறி
மாவடுவின் வகிரனைய கண்ணு ரெல்லா
மயங்கமணி மறுகுலாப் போந்த போது
பூவடிகண் டகக்காற்குக் குடமொன் றந்தப்
பொங்கடியைப் பொருதலைத்துன் கருணை தன்னைத்
தூவடுமென் னவனுணர வுணர்த்தச் சேவ
றுன்னுமொரு தென்னுறந்தை வாழுந் தேவே. (சங)

ஏரேறும் பெருமானே யிறையே யென்ற
னின்னுயிரே யின்னுயிர்க்கோர் துணையே நாயேன்

வாரேறு முலைமடவா ரல்கு லென்னு
மாளாத பாழ்ங்குழிவீழ்ந் தாழா வண்ணஞ்
சீரேறு நினதுதிரு வடியைப் போற்றுந்
திடஞான மருளிமட நீக்கி யாள்வாய்
தேரேறு முடிமன்னர் மூவர் போற்றுஞ்
செழுஞ்சுடரே திருவுறந்தை யமருந் தேவே. (சச)

வேயாருந் தோளியொரு பாகங் கொண்ட
வேதியனே மேதினியிற் பொருளில் லானைத்
தாயாரு நீயாரென் றேசா நிற்பார்
தமியேனவ் வறுமையினால் வருந்தா வண்ணஞ்
சேயாரு நினது திருவடியிற் சேர்த்துச்
செனனமர ணத்துயரம் போக்கி யாள்வாய்
காயாருங் கேளித்தண் டலைசூழ் கோழிக்
கண்ணுதலே வண்ணமைந்து கொண்டாண் டோனே.(சரு)

நேரியர்கோ னெஞ்சமெனுங் கஞ்ச நீங்கா
நித்தபரி பூரணமாஞ் சுத்தத் தாளு
மாரியர்கோன் முனமொருகைக் கூர்வாள் கொண்டே
யறிகுறிவைத் தகன்றிடுநின் முடியும் பொல்லாக்
காரியமே மிகப்புரியும் வஞ்ச நாயேன்
கண்குளிரக் கண்டுதெரி சிப்ப தென்றோ
சீரியர்கள் போற்றுதிரு வுறந்தை மேய
சிற்பரனே யுற்பவநோ யொழித்தாள் வோனே. (சசா)

ஆளுடைய பிள்ளைமணப் பந்தர்வருந் தினுக்கன்
றடைந்துதவி லேனுச்சா புரமதுமுந் தியதாற்
கோளுடைய கூற்றனுயிர் குடித்தநினை யடைந்தாற்
கொடுமரணத் துயர்நீங்கு மெனக்கருதி யடியேன்
வேளுடைய புரமெரிசெய் வித்தகநின் றுணையே

விரும்பியடைந் தேனினது விருப்பமறிந் திலனே
வாளுடையந் தரத்தமரும் வானவர்க ளனைவரும்
வந்துவணங் குறுமுறந்தை மந்திரமா மணியே. (சஎ)

மணிக்குழையோ டமர்செய்மத ரரிக்க ணார்தம்
வஞ்சமயக் கினிற்றஞ்ச மின்றிமிக வீழ்ந்து
கணிக்கரும்வெந் துயர்கொண்மனத் தினைவிரைந்து மீட்டுன்
கழல்கருதப் புரிந்துபழ வினையகற்றி யருள்வாய்
குணிக்கருமோர் பொருளேநற் குணப்பெருமா மலையே
கோதில்குணங் குறிகள்கடந் தோதுறுநன் னெறியை
யெணிக்கருமா லயனரியெந் நாளு மேற்று
மெந்தையே திருவுறந்தை யிலங்குமொளி விளக்கே. (சஅ)

விளக்கொளியை மழுக்குமொளி மணிப்பூண் கொங்கை
மெல்லியர்கா மக்கலவி விரும்பியவ ரல்குற்
களக்கதனில் வீழ்ந்துமெலிந் தழலுமடி யேனைக்
களைகணு நினதுதிரு வடிமலர்சேர்த் தருள்வா
யளக்கமுடி யாதபெருஞ் செல்வந் தன்னு
ளளகையம ராபதியு மடையவகங் கூரந்
துளக்கமறப் பெருகுதிரு வுறந்தை மேய
சுந்தரனே செந்துவர்வா யந்தரிநா யகனே. (சகூ)

நாயகனே நாயகன்மா ரறுபான் மூவர்
நண்ணுநின தடிமலர்சேர்த் தென்னையினி தருள்வாய்
சாயகமைந் துடையமத வேளை யீன்ற
தண்டுளவ வண்டமர்வெண் டிரைப்பா லாழி
நேயமுட னினதுதிரு நடனங் காணு
நியமமே பூண்டபுலி முனிவ னீன்ற
சேயதனுக் களித்ததிரு வுறந்தை மேய
செல்வமே யெல்லையிலாக் கருணைத் தேனே.

வேறு.

தேவர்க டேவன் றென்னுறந் தைக்கோன்
மூவர்கள் போற்று முன்னவ னென்பார்
நாவலூர் நமபி நவின்றிட வேவல்
சேவடி கன்றச் சென்றது மென்னே. (ருக)

என்னக மேவி யெனக்கருள் புரியும்
பொன்னவிர் சடிலப் புண்ணிய னெங்கோன்
றன்மக னூர்தி தன்னை விரும்பும்
பன்னக மேனி பரித்தமை யென்னே. (ரு௨)

மையமர் கண்டன் மன்னுறந் தைக்கோன்
செய்யமர் சோற்றுத் துறைச்சிவ னென்பார்
கொய்தயன் மண்டை கொண்டுக ரத்தில்
வைகலு மையம் வாங்கிய தென்னே. (ருங)

தென்கயி லாய மெனுஞ்சிர கிரியைத்
தன்குண திசையிற் றழுவுறந் தைக்கோன்
மன்பதை தோறு மன்னிய மர்ந்தும்
மன்பதை யுணரா மாயம தென்னே. (ருச)

மாயவ னாதிய வானவர் போற்றுந்
தூயவ னெங்கள் தொல்லுறந் தைக்கோன்
நேயமு டன்றிரு நீறுடல் பூசிப்
பேயொடு மாடிய பெற்றிய தென்னே. (ருரு)

பெற்ற முவந்தினி தேறிய பெம்மான்
நற்றவர் புகழுறந் தைப்பதி நாதன்
கற்றவர் போற்றுங் கௌரியோர் பாதி
பற்றிட வைத்தருள் பான்மையு மென்னே. (ருசு)

பான்மதி சூடும் பரனுறந் தைக்கோன்
மான்முதல் போற்று மன்னவ னென்பார்
தேன்மலி கொன்றைச் செஞ்சடை யோர்பால்
வான்மலி கங்கை வைத்தமை யென்னே. (ருஎ)

தமைநினை பவர்வினை சாடுறந் தைக்கோ
னிமையவ ரிறைதொழு மிறையவ னென்பார்
தமநிற நிருதன் றலையொரு பத்து
மிமையினிற் போக்கெரு தேறிய தென்னே. (ருஅ)

ஏற்றெருடு சூற்படை யேந்துறந் தைக்கோன்
பேற்றை யளிப்பவர் பேணினர்க் கென்பார்
கூற்றை யுதைத்தருள் கோகன கததா
ளேற்றிபு மெற்கரு ளாமையி தென்னே. (ருகூ)

நேரலர் முப்புர நீறுப டும்படி
மூரல் புரிந்தருண் முன்னவ னென்பா
ராரல ருத்திய பாலமு துண்டவன்
முரக மோதத் தாழ்ந்தது மென்னே. (கூ0)

வேறு.

என்னக நினக்குத் தந்தே னின்னரு ளெனக்குத் தந்தாய்
பன்மல ருனக்குத் தந்தேன் பரகதி யெனக்குத் தந்தாய்
இன்னமுந் துதிநிற் கீந்தே னிணைமல ரடியெற் கீந்தா
யுன்னத முனிவர் போற்று முறந்தையி லிருக்குங் கோவே.

கோவினைப் புரக்க முன்னங் கோவினை யெடுத்த கோவுங்
கோவினை யகழ்ந்துங் காணுக் கோகன கத்தாட் போதைக்
கோவினை யிழந்த நாயேன் கொடுந்தலை சூட்டி யாண்டான்
கோவினைப் பாலங் கொண்ட கோழிமா நகரத் தானே. (கூஉ)

தாமொரு பதியே மற்றைச் சதுமுக ளாதி யோர்க
ளேனமர் பசுக்க ளேயென் றுணர்தர வுலக ரியாருந்
தேனமர் துளவத் தோனுந் திசைமுகத் தவனுந் தேட
வானள வுயர்ந்து நின்றான் வாரணப் பதியு ளானே (கூடு)

பதிக்கெலாஞ் சிறந்த தாய பதியெனு முறந்தை தன்னிற்
றிதிக்குமா லயன்முன் னான தேவர்கள் போற்ற நாளுங்
கதிக்கொரு வித்தாங் காந்தி மதியெனுங் கௌரி யோடென்
விதிக்குமோர் முடிவுண் டாக மேவினை விமல வாழ்வே (கூசு)

விமலமா முனிவர் சித்தர் மேதகு பெரியோ ரெல்லா
மமலமா நினது செந்தா மரைமல ரடியைப் போற்றிக்
கமலநான் முகனுங் காணக் கதியினை யடைய நாயேன் [வே.
சமலமாந் தனுவை யோம்பித் தளர்கின்றே னுறந்தை வாழ்

வாழ்வினை விரும்பி நாயேன் மண்ணிடைப் பலவா றாகப்
பாழ்வயிற் றினையோம் பற்குப் பட்டது போதும் போதுங்
கேழ்தனை யன்றி யில்லாக் கிளரடி மலரிற் சேர்த்தே
யூழ்வினை யகற்றி யாள்வா யுறந்தையி லிருக்குந் தேவே. ()

தேவகி மைந்தன் சென்னி சேவடி சூட்டி யாண்ட
மூவகி லங்கள் போற்று முனிதனை யாண்ட வெந்தாய்
பாவகி தன்னை யீன்ற பஞ்சவண் ணேசா நின்பொற் [வே.
சேவடி சேர்த்தாட் கொள்வாய் திருவுறந் தையில்வாழ் கோ

கோதுறு பிறவி யென்னுங் கொடுங்கடற் படிந்து நாளும்
பேதுறு கின்ற நாயேன் பெருந்துய ரகற்றி நின்பொற்
றூதுறு வாரி சப்பூந் தாளிணை சேர்த்தாட் கொள்வா
யோதுறு வளங்க ளெல்லா முறையுறை யூர்வாழ் வோனே.

நேற்றுளா ரின்று மாண்டு நீறுபட் டழியக் கண்டும்
போற்றிலே னுறந்தை யுன்றன் பொற்றளி யடைந்து நாயேன்

கீற்று வெண் மதியமோடு கிளரு மந்தாகி னிப்பே
ராற்றையுந் தரித்த வேணி யையவென் றுய்யு நாளே. (சுகூ)

நாளெவன் செய்யு நின்னை நாடொறும் வழுத்து மென்னைக், கோளெவன் செய்யும் பொல்லாக் கொடுந்தொழிற் கூற்றென் செய்யும், வாளுடை யசுரர்ச் சாடும் வச்சிர பாணி போற்றுந், தாளுடை மலருய் யானஞ் சூழ்திரு வுறந்தைத் தேவே. (எ0)

வேறு.

வேதா தாழும் வாரண மூதூர் வித்தகனே
தாதா தாவென் றுலகிற் றமியேன் றளராமற்
போதார் நின்றன் பொன்னடி யுகள முடிசூட்டி
நாதா நம்பா வென்று நவிற்றப் புரிவாயே. (எக)

வாயே யுறந்தைப் பதியை வண்ணன் மலரடியும்
வேயே புரையு மென்றோட் காந்தி மதியடியு
மாயே யகன்றின் படையத் தினமும் வாழ்த்துவைமே
னீயே நல்லா யென்று நிகழ்த்தி யுய்வேனே. (எஉ)

உய்வா யுறந்தை மாநக ருறையு மைவண்ணன்
செய்வாய்ந தொளிருஞ் செங்கம லச்சே வடியிணையை
மைவாய்ந் தொளிர்கண் மங்கையர் மையல் வீழாமற்
பொய்வாய்ந் தொளிர்புன் மடமிகு நெஞ்சே போற்றுதியே.

போற்று மடியார் பொன்னுல கடையப் புரிந்தருளு
நீற்றொளி மேனிய னேயுறந் தைப்பதி நின்மலனே
தாற்றொடு சுளிமா மதகரி யைக்கொல் சக்கிரியா
மேற்றினி லிமவான் மகளுடன் வந்தற் கின்றருளே. (எச)

இன்றருள் செயினின் மகவுட னிமய மாதினையும்
நன்றினி தேத்திப் புகழுவ னுறநதை நகர்வாழும
பொன்றுத லில்லாப் புண்ணிய நின்றனை யும்புகழ்வேன்
குன்றினை யில்லா விண்டுவை வண்டாக் கொண்டோனே. ()

கொண்டலை யூர்ந்தொரு கோவினை யாளுங் கோமானு
மண்டாக ளுக்கன் றமுதை யளித்தவ னுடையனுங்
கண்டு வணங்குறந் தைப்பதி மேவிய காமாரி
புண்டரி கத்திரு வடிமலர் புகவருள் செய்வாயே. (எசு)

செய்வாய்ந தொளிருறந் தைப்பதி மேவிய தெள்ளமுதே
பைவா ளரவப் பணியணி பஞ்ச வர்னேசா
பொய்வா யுலகப் பற்றினை விட்டுன் பொன்னடியாம்
மெய்வாய் வீடடை யப்புரி வாய்வெள் விடையோனே. (எஎ)

விடையார் மதிலுறந் தைப்பதி மேவிய விண்ணவனே
யடையார் புரமூன் றெரியச் சிரித்த வாண்டகையே
கடையா ரினுங்கடை யேன்றனைக் காத்தருள் புரிவாயே
சடையார் கொன்றைத் தொடையாய் சம்போ சங்கரனே. ()

சங்கர னேசிவ சாமபச தாசிவ வென்றுனையே
பொங்குறு துயர்முழு தும்மக லப்புக ழச்செய்வா
யெங்குறை முழுதுந் தீர்த்தருள் காந்தி மதியென்றாய்
பங்குட னுறந்தைப் பதியமர் பஞ்ச வர்னேசா. (எகூ)

ஈசா வுறநதைப் பதியை வண்ண வின்னமுதே
மாசாா நெஞ்ச முடையார் காணு மாதேவா
தேசார் நினது திருவடி மலரிற் சிறியேனை
யேசா வண்ணஞ் சேர்த்தருள் புரிவா யிறையோனே. (அ0)

### வேறு.

இறைகொளுறந் தைப்பதியி லென்னையினி தாண்டான்
மறைபுகழுங் காந்திமதி மங்கைமண வாளன்
பிறைகொளெயிற் றந்தகபின் னிகழ்வதுண ராமன்
மிறைகொளுரு வங்கொடேனை மேவியெவன் செய்வாய். ( )

செய்யபது மத்துறையுந் தேவையிவண் கூவிப்
பையவிவன் றன்னையினி மேற்படைப்பை யாயிற்
கொய்திடுவ னின்னுமொரு தலையையெனக் கூறு
யுய்வையடி யார்க்கருளு முறந்தைநக ரானே. (அஉ)

நகரமக ரங்களென நவிலுமலம் போக்கி
யகரமென நின்றவெனை யருள்வகரஞ் சேர்த்துச்
சிகரமதாய்ச் செய்ததிரு வுறந்தைநகர் மேய
வுகரமதை யுள்ளபடி யுணர்வர்பெரி யோரே. (அ௩)

பெரியபொரு ளெவைக்குமொரு பெரியபொரு ளாயுந்
தெரிவரிய சிற்றணுவிற் சிற்றணுவ தாயு
மரியபர கதியையடி யார்க்கருள்வ தாயு
முரியவொரு பொருளையுறந் தைப்பதிக்கண் டேனே. (அச)

கண்டுதெரி சித்தவடி யேனையமன் கண்டு
கண்டுமொழி பேசியக லக்கடைக்கண் கண்டு
தொண்டுபுரி வார்களுடன் றொண்டுபுரி யென்று
விண்டுபுகன் றானுறந்தை வியனகரி னின்று. (அரு)

இன்றுதிருக் காந்திமதி யம்மையுட னென்னைத்
தொன்றுவினை விண்டகலத் தொண்டுபுரி யென்றான்

பொன்றுதலி லாததிருப் பொன்னிநதி சூழுந்
தன்றுணையி லாதவுறந் தைத்தளியில் வாழ்வோன். (அசு)

வாழ்வினைமெய் யென்றுமதி மாழ்குமடி யேனைக்
கேழ்கிளர்செந் தாமரைமென் கேடிலடி சேர்த்ததான்
பாழ்கலியெ ழாதுபயன் படுகழனி சூழ்ந்து
தாழ்வையடை யாததனி நகருறந்தை யண்ணல். (அஎ)

அண்ணலுனை யன்றியகி லங்களிலை யென்றே
வண்ணமறை சொல்லியது வாய்மையென வின்றே
பண்ணவர்கள் போற்றுறந்தைப் பதியதனிற் கண்டே
னெண்ணமுடி யாததுய ரின்றகன்ற நானே. (அஅ)

நானெனவு மெனதெனவு நவிலுவதி லென்ன
வானதுமற் றென்றுமிலை யாதலினு லன்றே
மோனமுடன் ஞானசன காதிமுனி வோர்கள்
வானவர்போற் றுறந்தைநகர் வள்ளலுனைக் கண்டார். (அகூ)

ஆர்மருவு சடையுடையம் புலியதளோ டாட
வார்மருவு கொங்கைமலை மாதுகளிப் பெய்தச்
சீர்மருவு தில்லைமணி மன்றினட மாடு
மேர்மருவு கழலிணைசேர்த் தாளுறந்தை யீசா. (கூ0)

**வேறு.**

ஈசனே யுறந்தை வாழு மிறைவனே போற்றி நாயேன்
பாசவே ரறுத்தாட் கொண்ட பஞ்சவர் ணேச போற்றி
மாசிலா மணியே மன்றின் மாநடம் புரிவாய் போற்றி
யாசக லடியா ருள்ளத் தமருமை வண்ண போற்றி. (கூக)

வண்ணமா மறையோன் முன்னு வானவர்க் கரசே போற்றி
வண்ணவா ரணங்கை யேந்து மாதவன் போல்வ ருந்தா
வண்ணமா வுறந்தை தன்னில் வந்தடி காட்டி யாண்ட
வண்ணமோ ரைந்துங் கொண்ட வள்ளலே போற்றி போற்றி

போற்றிமெய் யடியார் சூழ்ந்து புகழ்திரு வுறந்தை வாழ்வே
யாற்றொடு கொன்றை தும்பை யணிந்தவை வண்ண போற்றி
மாற்றறி யாத செம்பொன் மலையினைக் குழைத்தாய்போற்றி
நீற்றொளி பழுத்த மேனி நின்மலா போற்றி போற்றி.(கூங)

நின்மலா போற்றி மன்றி னிருத்தனே போற்றி நாயே
ன், புன்மல மறுத்தாட் கொண்ட புண்ணியக் கொழுந்தே
போற்றி, வன்மனத் தவர்கள் காணு மாநக ருறந்தை வாழு
ஞ், சொன்மனக் கெட்ட வொண்ணுச் சோதியே போற்றி
போற்றி. (கூச)

சோதியா தெனையாட் கொண்ட சுயம்பிர காச போற்றி
யாதியேபு றந்தை வில்வ வனத்தமர்ந் தருள்வாய் போற்றி
பாதியோர் பெண்ணை வைத்த பஞ்சவர் னேச போற்றி
சாதிநான் மறைகள் போற்றுந் தத்துவப் பொருளே போற்றி

தத்துவ ரூபஞ் சுத்தி தரிசன முதலாக் கூறும்
பத்தினு ளிறுதி யாய பரசிவ போகந் துய்க்கச்
சத்தறி வின்ப மான தந்தையே செய்வாய் போற்றி
முத்தர்போற் றுறந்தை மூக்கிச் சரத்தமர் முதல்வா போற்றி

முதல்வனே யுறந்தை வாழு முக்கண்வா னவனே போற்றி
கதமில்மா முனிவர் போற்றுங் காசிபன் பன்னி தன்னைப்

புதல்வன்கார்க் கோட னோடு புரிந்தினி தளித்தாய் போற்றி
மதகரி முகனை யீன்ற வள்ளலே போற்றி போற்றி. (கூள)

வள்ளலே யுறநதை வில்வ மாநிழ லமர்நதாய் போற்றி
தெள்ளிய வறிஞர் போற்றுஞ் சிவபுரத் தரசே போற்றி
கள்ளுலா மலர்ப்பூஞ் சோலைக் காவிரி நாடன் போற்று
மள்ளிலைச் சூல மேநது மண்ணலே போற்றி போறறி.(கூஅ)

அண்ணலே யுறநதை வாழு மப்பனே போற்றி நாயேன்
கண்ணிணை களிக்கக் காட்சி கொடுத்தருள் கடவுள் போற்றி
தண்ணறுக் கொழிக்குஞ் செய்ய தாமரைமுகத்தாய் போற்றி
பண்ணவர் வணங்கி வாழ்த்தும் பஞ்சவர் னேச போற்றி. ()

பஞ்சவர் னேச போற்றி பகர்வில்வா ரணிய போற்றி
மஞ்சவிர் கூந்தற் காந்தி மதிமண வாள போற்றி
நஞ்சமர் கண்டத் தெண்டோ ணற்பரம் பொருளே நின்றன்
செஞ்சர ணங்க ளான திருவளர் கமலம் போற்றி. (க00)

ஆகச்செய்யுள் - க0க.

## திருவுறந்தைப் பதிற்றுப்பத்தந்தாதி

முற்றிற்று.

ஸ்ரீ பஞ்சவர்னேசர் திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவுறந்தைப்
# பதிற்றுப்பத்தந்தாதி.

இஃது

உறையூர் வித்வான்

ஸ்ரீ: வாஞ்சைலிங்க வைத்தியநாதசெட்டியா

ரவர்களால்

இயற்றப்பட்டு,

திருத்தவத்துறை மிராசுதாரர்

ம-ள-ள-ஸ்ரீ

தம்பாச்சியாபிள்ளை குமாரர்

கனகசபைப்பிள்ளை யவர்களால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சார்வரிஹூ ஆவணிமீ. 1900

